

கலை இலக்கியத் திங்களிதழ்

# கணையாழி

மலர் : 59 இதழ் : 12 மார்ச் 2025 விலை ரூ.25/-

## மொழி மிரட்டலும் விரட்டலும் – ம.ரா.



## கணையாழி மின்னிதழ் சந்தா விவரம்

தனி இதழ் ரூ 25

ஓராண்டு சந்தா ரூ 275

சந்தா செலுத்துபவர்களுக்கு மின்னிதழ் அனுப்பப்படும்.

இணையத்தில் வாசிக்க

**www.kanaiyazhi.com**

**magzter.com, Magraan - Magazines**

அன்புகூர்ந்து பாருங்கள்..

## மின்னிதழ் சந்தா செலுத்த வங்கி விவரம்

Account Name - KANAIYAZHI,
Account No. 147202000000792
Bank - INDIAN OVERSEAS BANK,
VALMIKI NAGAR BRANCH,
CHENNAI-600 041.
IFSC CODE- IOBA0001472






# கணையாழி

மலர்: 59 இதழ்: 12
மார்ச் 2025 விலை ரூ. 25/-

**நிறுவனர்**
கி. கஸ்தூரி ரங்கன்

**சிறப்பாசிரியர்**
இந்திரா பார்த்தசாரதி

**பதிப்பாளர்**
ம. இராசேந்திரன்

**ஆசிரியர்**
மய்திலி ராசேந்திரன்

**நிருவாக ஆசிரியர்**
உரு. அரசவேந்தன்

**துணை ஆசிரியர்**
கவிதைக்காரன் இளங்கோ

**ஆசிரியர் குழு**
மு. ராமசாமி, ட்ராஸ்கி மருது
ஆ. பத்மாவதி, சாந்தி சித்ரா

**ஆலோசகர்கள்**
வ. ஜெயதேவன்
ரெ. பாலகிருஷ்ணன்
சு. சங்கரவடிவேலு
நா. சுவாமிநாதன்
தமன் பிரகாஷ்
கவிதா சொக்கலிங்கம்

**அயலக ஆலோசகர்கள்**
எம்.ஏ. முஸ்தபா (சிங்கப்பூர்)
கார்த்திகா பார்த்திபன் (கனடா)

**ஊக்கத்துணை**
தென்றல் கருணாகரன்
தென்னரசி பிச்சைமணி
எழில் சாலமன், இரா. உலகரசி

**இதழ் வடிவமைப்பு / உதவி ஆசிரியர்**
கோபு ராசுவேல்

**சட்ட ஆலோசகர்**
வழக்கறிஞர் சொ. சந்திரமோகன்

**கணையாழி மின்-இதழ்**
https://kanaiyazhi.net/
http://kanaiyazhi.emagaz.in
& www.magzter.com

படைப்புகளை மின்னஞ்சலில் அனுப்புங்கள்

**மெய்ப்பு உதவி**
வேதநாயக்

**கணையாழி**
தொடர்புக்கு : +91 94432 69689
மின்னஞ்சல்: kanaiyazhi2011@gmail.com


உங்களுடன்



# மொழி மிரட்டலும் விரட்டலும்

மொழி என்பது வாழும் மரபு!
மரபின் விழுமியங்களில்
மக்களின் வாழ்க்கை!

மொழி என்பது
தனிமனித அடையாளம் மட்டும் இல்லை;
சமுதாயத்தின் அடையாளம்!
பல்வேறு துறைகளிலும் மக்கள்
வாழ்க்கையை வழிநடத்தும் ஆளுமை!
மாற்ற நெருக்கடிகளில்
உருமாறிக் கொண்டிருக்கும்
இன்றைய உலகத்தில்
முன்பை விடவும் கூடுதலாகத்
தேவைப்படுகிறது மொழி! எனவே
ஒரு மொழியின் இருப்பிலும் சிறப்பிலும்
இருக்கிறது மக்களின் பெருமிதம்!

தமிழ் மொழியின் இருப்பைச்
சிதைக்கவும் குலைக்கவும்
சமுதாய அரசியல் வரலாறு மற்றும்
பண்பாட்டுக் காரணங்களோடு
பொருளாதாரத்தையும் சேர்த்துக்கொண்டு
மிரட்ட வருகிறது புதிய கூட்டணி!

காலனி ஆதிக்க அதிகாரத்தால்
பின்னுக்குத் தள்ளப்பட்ட தமிழ்
வணிகம், தொழில் வேலை வாய்ப்புகள் பெயரில்
உலகமயமாக்கத்தால் பயன்பாட்டளவிலும்
மிரட்டப்பட்டு வருகிறது!.

போதாக்குறைக்கு விடுதலை இந்தியாவில்
அரசியல் கொள்கை பெயரில்
அடக்குமுறை மிரட்டலுக்கும் ஆளாகி வருகிறது!

அறிவு பெற பள்ளிக்கு வரும் குழந்தைகளை
மிரட்ட வரும்போதெல்லாம்
ஓடி ஒளியாமல் தேடிப் பிடித்து
விரட்டி வருகிறது தமிழ்நாடு!

திரை, வானொலி, தொலைக்காட்சி,
சமூக ஊடகங்கள் என்று
எல்லாத் திசைகளிலும் வந்து
எட்டிப்பார்க்கிறது மொழி மிரட்டல்!

நகர்ப்புற வாழ்வுக்குப் புலம்பெயர்கிற போதே
உள் நாட்டிலும் கூட ஒதுக்கி வைக்கப்பட்டாலும்
பொது வெளிகளில் பெரும்பான்மை மிரட்டலை
எதிர்க்கத் தவறுவதில்லை.

அலுவல் மொழி என்று அதிகாரம் செலுத்தவரும்
ஆக்கிரமிப்பு மிரட்டலை விரட்ட ஒவ்வொரு நாளும்
அதிகாரப் பகிர்வுக் களத்திலும்
போராடி வருகிறது தமிழ்!



*மொழி மிரட்டலில் பயந்து*
*ஒவ்வொரு ஆண்டும்*
*செத்துக் கொண்டிருக்கின்றன*
*உலக மொழிகள் பல!*

*மொழியின் அழிவு என்பது*
*ஆயிரக்கணக்கான ஆண்டுகளின்*
*அறிவு, மரபு, கதைகள்,*
*தொன்மப் பண்பாட்டு விழுமியச்*
*சேகரிப்புகளின் அழிவு!*

*மரபிலிருந்து துண்டிக்கப்படுபவர்கள்*
*உலகச் சமுதாயப் பங்களிப்பில்*
*பின்தங்கிப் போவார்கள்!*
*புறக்கணிக்கப்படுவார்கள்!*

*விலங்குகளின் மிரட்டலில்*
*சத்தம் மறைத்து உயிர் காத்த*
*ஆதி மனித வாழ்க்கையில்*
*தமிழை நிறுத்தாமல்*
*விரட்டி விரட்டிப் போய் வேட்டையாடும்*
*போர்க்கள மொழியாக*
*மாற்றி இருக்கிறார்கள் தமிழர்கள்!*

*கணினி, மென்பொருள்,*
*செயற்கை நுண்ணறிவு என்று*
*வளர்ந்து வரும்*
*தொழில் நுட்பங்களை ஏற்கவும்*
*அடுத்தடுத்தத் தலைமுறைகளும்*
*பேசவும் எழுதவும் படிக்கவும்*
*உழைத்து வருகிறார்கள்!*
*உலகத் தமிழர்கள்!*

*நிலம், நீர் என்று*
*உயிர் வளர்ப்பது எல்லாம்*
*தாய் என்பதால் மொழியும்*
*தாய்மொழி ஆகிறது!*

*சூரியன் தவற விட்டக் குட்டிநெருப்பை*
*உயிர்கள் வாழும் நிலமாக மாற்றியது*
*ஊழிகள் என்றால்*
*விலங்கை மனிதராக்கி நிலத்தை உலகமாக*
*மாற்றியிருப்பது மொழி!*

*சிறுபான்மை பெரும்பான்மை*
*கணக்கெடுப்பு*
*தாய் மொழிக்குப் பொருந்தாது!*

*மொழி உரிமை*
*மனித உரிமையாகி இருக்கிறது.*
*சமூக நீதியின் குரலாகவும் இருக்கிறது.*
*தகவல் பெற மட்டும் இல்லை*
*கிடைக்கிற தகவலில்*
*உண்மையைக் கண்டறியவும்*
*மொழி தேவைப்படுகிறது!*

*எப்பொருள் யார் யார் வாய்க் கேட்பினும்*
*மெய்ப்பொருள் காண்பதை மட்டுமே*
*அறிவு என்கிறார் திருவள்ளுவர்!*

*இயற்கை ஒலி, உழைப்பு ஒலி,*
*உணர்ச்சி ஒலி, உடல்மொழி,*
*சைகை மொழி, கருத்து மொழி என்று*
*மொழிக்கும் இருக்கிறது*
*பரிணாம வளர்ச்சி.*

*இயற்கை மொழிச் செயலாக்கம் வழி*
*கணினிக்கு மொழிகளைக்*
*கற்றுக்கொடுத்து வருகிறார்கள்!*

*இனி அவரவர் தாய்மொழியைப்*
*பிழை இல்லாமல் இணையத்திற்குக்*
*கற்றுக் கொடுத்தால்*
*நமக்குப் பதிலாக*
*அது உலக மொழிகளைக் கற்றுக் கொள்ளும்!*

*அப்படி மொழி மிரட்டலை*
*நிரந்தரமாக விரட்ட வந்துகொண்டிருக்கிறது*
*செயற்கை நுண்ணறிவு!*

*ஆனாலும்*
*இப்போதும் சத்தத்தைக் கொண்டு*
*விலங்குகளை மிரட்டுவதைப் போல*
*மொழியைக் கொண்டு*
*மொழியை மிரட்டுகிறார்கள்!*

*நிதி என்றும் நிருவாகம் என்றும்*
*புனிதம் என்றும்*
*ஒதுக்கி வைக்கிறார்கள்!*
*தேவ மொழி-நீசமொழி என்று*
*இழிவுபடுத்துகிறார்கள்!*
*ஒரு மொழியைக் கட்டாயப்படுத்தி*
*மற்ற மொழிகளைப் புறக்கணிக்கிறார்கள்!*

*பள்ளிப் பருவத்திலேயே*
*மிரட்டலை விரட்டத்*
*திருவாரூரில் அப்போது*
*களம் அமைத்தார் கலைஞர்!*

*ஆனால் இப்போதும்*
*மிரட்டல் நின்றபாடில்லை.*

*அதனால்*
*“ஆதிக்க மொழித் திணிப்பைத் தடுத்து*
*அன்னைத் தமிழைக் காப்பேன்.” என்று*
*மொழி மிரட்டலை விரட்டத்*
*தமிழகத்தையே இப்போது*
*களத்தில் நிறுத்தியிருக்கிற*
*தமிழ்நாடு முதல்வரைப்*
*பிறந்த நாளில் வாழ்த்துவோம்!*

அன்புடன் **ம.ரா.**

# உள்ளடக்கம்

## கட்டுரை


ஸ்ரீவில்லிபுத்தூர் எஸ். ரமேஷ் 06
இளையவன் சிவா 18
பாரதிராஜா 30
அகராதி 51
கவிதைக்காரன் இளங்கோ 59


## சிறுகதை


வாசுதேவன் அருணாசலம் 12
முத்துஜெயா 26
கீதா 36
கிருத்திகா தாஸ் 56


## கவிதை


மு.முபாரக் 11
தங்கேஸ் 16
ஜெயானந்தன் 17
அருணோதயா 24
பாலகுமார் சுப்ரமணியன் 29
நேசன் மகதி 34
ராபின் மணி 34
ரகுநாத் வ 35
சன்மது 49
கி. சரஸ்வதி 55
கவிஜி 55


## கடைசிப் பக்கம்


இந்திரா பார்த்தசாரதி 67








கட்டுரை

ஸ்ரீவில்லிபுத்தூர் எஸ். ரமேஷ்

# எனது ஆசான்கள்

'நீ ஒருபோதும் ஸ்கூலுக்கு லேட்டா வராத. அப்படி வந்தா என் முகத்துக்கு முன்னாடி வந்து நிக்காத' என்று என் ஒண்ணாம் வகுப்பு ஆசிரியர் தொப்பி சார் சொன்ன அறிவுரையை இன்றுவரை பின்பற்றி வருகிறேன். எந்த ஒரு பொது நிகழ்ச்சிக்கோ அல்லது உறவினர்கள் வீட்டின் விசேஷங்களுக்கோ அடியேன் கால தாமதமாகப் போகும் வழக்கமே கிடையாது. சில நிகழ்ச்சிகளில் கலந்துகொள்ள நான் குறிப்பிட்ட இடத்துக்குச் சென்றால் அங்கு நான்தான் முதல் ஆளாகப் போயிருப்பேன். நமது பள்ளி ஆசிரியர்கள் ஒரு பள்ளி மாணவனின் வாழ்க்கையை எந்த அளவுக்குச் செதுக்குகிறார்கள் என்பதற்கு இதையே ஓர் உதாரணமாகக் கொள்ளலாம்.......

பால்ய பருவ ஞாபகங்களை மீள நினைத்துப் பார்த்து, அவற்றை மீண்டும் அசை போடுதல் என்பது வெகு சுகமானது. ஆங்கிலத்தில் இதற்கு "நஸ்டேல்ஜா" (nostalgia) என்று பெயர். உங்களுக்கு அந்த அசை போடும் சந்தர்ப்பங்கள் வாய்த்ததுண்டா?

**ஜெய்ஹிந்த்புரம் பள்ளி:**

எல்.கே.ஜி வகுப்புகளில் என்னைக் கொண்டுபோய்ச் சேர்ப்பதற்காக எனது அம்மா எனது பிறந்த தேதியை ஏழு மாதங்களுக்கு முன்பாக தள்ளிவைத்து, பிறந்த தேதியைத் மாற்றிக் கொடுத்து பள்ளிக்கூடத்தில் சேர்த்துவிட்டார்.

மதுரையில் உள்ள ஜெய்ஹிந்த்புரத்தில் உள்ள காந்தி தெருவில் ஒரு வாடகை வீட்டில் குடக்கூலிக்குக் குடியிருந்த என் தாய் வழித்தாத்தா, முத்தா என்ற சீனிவாசனின் வீட்டில்தான் நான் தங்கியிருந்தேன். என் அப்பா விருதுநகரில் நீதிமன்றத்தில் பணியாற்றிக் கொண்டிருந்தார். ஜெய்ஹிந்த்புரத்தில் உள்ள "க்ரேஸ் நர்சரி ஸ்கூல்" என்ற பள்ளியில் நான் சேர்க்கப்பட்டேன். அதை நடத்தி வந்தவர் ஒரு முன்னாள் ராணுவ வீரர். போர்க்களத்தில் தனது வலதுகையின் உள்ளங்கையை இழந்து, அதை ஒரு தோல் கையுறையை அணிந்துகொண்டு மறைத்திருந்தார். எனக்கு எல்.கே.ஜி., யூ.கே.ஜி. பாடங்களை எடுத்தது ஆங்கிலோ-இந்தியர்கள் என்பது எனக்கு இன்னமும் நினைவில் இருக்கிறது. தினந்தோறும் காலையில் பள்ளிக்குப் போக மறுப்பதால், என்னை என்

தாய் மாமா சம்பத்தும் பக்கத்து வீட்டு சோமசுந்தரம் என்ற யானை மாமாவும் என்னை ஆளுக்கு ஒரு கையாகப் பிடித்துக்கொண்டு தரதரவென பள்ளிக்கூடத்துக்குத் தூக்கிக்கொண்டு சென்றது எனக்கு நினைவுக்கு வருகிறது. அந்தப் பள்ளி இருந்தது பாரதி தெரு என்று நினைக்கிறேன். நான் தினமும் காந்தி தெருவிலிருந்து பாரதி தெருவுக்குச் சென்றேன்.

சிறுவயதில் நான் வாழ்ந்த வீட்டின் அருகே தாவித்தாவி விளையாடி, கீழே விழுந்து நான் காயப்பட்டுக்கொண்டு, அங்கு இருந்த "கிச்லே ஆஸ்பத்திரி"யில் எனக்கு மருத்துவம் பார்க்கப்பட்டது எனக்கு ஞாபகம் இருக்கிறது.

யூ.கே.ஜி படித்து முடிக்கும் முன்பே, என் அம்மா மதுரை வந்து என்னை விருதுநகருக்குக் கூட்டிக்கொண்டு சென்றுவிட்டார். அங்கு மதுரை ரோட்டில் இருந்த செய்ன்ட் ஜான் சர்ச் வளாகத்தில் அப்போதுதான் தொடங்கப்பட்ட ஒரு துவக்கப்பள்ளியில் என்னைக்கொண்டு போய் என் அப்பா சேர்த்தார். அந்த சர்ச் வளாகத்தில் இருந்த ஓர் அறைதான் என்னுடைய பள்ளிக்கூடம். அந்தத் தூய யோவான் தேவாலயத்துக்கு நேர் எதிரே, என் அப்பா பணிபுரிந்த நீதிமன்றம் இருந்தது. அங்கு வகுப்பறைக்கு அருகே நிறுத்தப்பட்டிருந்த நான்கு சக்கர ரதம் ஒன்றைப் பார்த்துவிட்டு என் அப்பா அந்த ஆசிரியையிடம் "அது என்ன?" என்று கேட்டார். அதற்கு அந்த ஆசிரியை, "ஐயா, அது இறந்தவங்களை கொண்டுபோற வண்டி" என்று பதில் சொன்னார்.

என் அப்பா அன்றே என்னை அந்தப் பள்ளியை விட்டு வெளியே கொண்டுவந்து விட்டார். பலரிடமும் நன்கு விசாரித்த என் அப்பா அங்கு இருந்த காமராஜர் வித்தியா சாலை என்ற பள்ளியில் சேர்த்தார். அதே பள்ளியில்தான் கர்ம வீரர் காமராஜரும் படித்தார் என்ற விவரம் சில ஆண்டுகள் கழித்து எனக்குத் தெரிய வந்தது.

**தொப்பி சார்!**

என் ஒண்ணாம் வகுப்பு ஆசிரியர் திருச்செந்தூருக்குப் போய் மொட்டை போட்டுக்கொண்டு வந்தார். மொட்டைத் தலையை மறைக்க அந்நாளில் புகழ் பெற்ற எம்.ஜி.ஆர் தொப்பி ஒன்றை அணிந்துகொண்டு வந்தார். அதிலிருந்து என் அம்மா அவருக்கு "தொப்பி சார்" என்று பட்டப்பெயர் சூட்டி விட்டார். அவரது பெயர் ஜெயராஜ். அவர் எங்களுக்குச் சொன்ன முதல் அறிவுரை எங்கள் மனதில் அழியாமல் நிரந்தரமாக எழுதப்பட்டு விட்டது.

'நீ ஒருபோதும் ஸ்கூலுக்கு லேட்டா வராத. அப்படி வந்தா என் முகத்துக்கு முன்னாடி வந்து நிக்காத' என்று என் ஒண்ணாம் வகுப்பு ஆசிரியர் தொப்பி சார் சொன்ன அறிவுரையை இன்றுவரை பின்பற்றி வருகிறேன். ஒரு தேசத்தின் கட்டுமானத்தை நிர்ணயிப்பது பள்ளிகளே. அந்த உன்னதப் பணியில் துவக்கப்பள்ளி ஆசிரியர்களின் பங்கு பாத்திரம் மிகவும் கேந்திரமானது. இளக்கமான களிமண்ணைக் கொண்டு எந்த உருவமும் செய்து கொள்ளலாம். இளக்கமான அந்தப் பாலபருவத்தில் இருக்கும் மாணவர்களை ஓர் ஆசிரியர் எந்த விதத்திலும் வளைத்து அவர்களைச் செம்மையான உருவத்திற்கு மாற்றிவிடக் கூடும்.

என் பள்ளி நாட்களில் எனக்கு ஆசிரியர்களாக இருந்தவர்களில் அநேகர் தெலுங்கை தாய் மொழியாகக் கொண்டவர்கள் என்பதை அந்நாளிலேயே அறிந்துகொண்டேன். அவர்களில் பலரும் போதிப்பதை நேசித்தவர்கள். அதை வெறும் தொழிலாகப் பார்க்காமல், பிறருக்கு அகக்கண்ணைத் திறக்கும் உன்னதமான பணியில் தங்களை ஈடுபடுத்திக் கொண்டார்கள் என்றுதான் சொல்ல வேண்டும்.

1970-களில் ஆசிரியர்களுக்கான பணியிடங்கள் நிறைய காலியாக அமைந்து, அவை நிரப்பப்படாமல் இருந்து, கிடைத்த

ஆசிரியர்களைக் கொண்டு அவை நிரப்பப்பட்டன என்று கருதுகிறேன். அந்நாளில் பள்ளி இறுதி வகுப்பு, பி.யூ.சி., மற்றும் இரண்டாண்டு ஆசிரியப் பயிற்சி முடித்தவர்களுக்கு உடனே பணியிடம் வழங்கப்பட்டுள்ளது. இந்நாளில் இருப்பது போல சிபாரிசு மற்றும் பணத்திற்கு ஆசிரியர் பதவிகளை விற்பனை செய்வது போன்ற நிலைமை இல்லாத காலகட்டம் அது.

'அகர முதல' என்று எனக்கு அட்சரங்களைப் பயிற்றுவித்த ஒண்ணாம் வகுப்பு ஆசிரியரில் இருந்து தொடங்கி, எனது கல்லூரிப் பேராசிரியர்களின் பெயர்களை இன்றும்கூட என்னால் நினைவுபடுத்திச் சொல்ல முடியும். திருவாளர்கள் ஜெயராஜ், சுப்பையா, பாலசுப்ரமணியம், அழகர்சாமி, நடராசன், எப்.டி.ரத்தினம், ராஜேந்திரன், நோவா செல்வராஜ், காந்திராஜன், சங்கர பாண்டியன், தங்கராஜ், தமிழ் ஐயா சுந்தரேசன் என என் வழிபாட்டுக்குரிய வகுப்பாசிரியர்களின் பெயர்ப் பட்டியல் இன்னமும் என் மனதில் கல்வெட்டு போல் பதிந்திருக்கிறது.

**ஆசிரியரும் துபாஷியும்:**

மூன்றாம் வகுப்பின் ஆசிரியர் பாலசுப்ரமணியம், தொண்டையில் சதை வளர்ந்து, அதற்காக அறுவைச் சிகிச்சை செய்துகொண்டார். அதன்பிறகு அவரால், வகுப்பில் மாணவர்களிடம் சத்தமாகப் பேச இயலவில்லை. எனவே அவர் தனது வகுப்பைச் சேர்ந்த ஐயப்பனை பக்கத்தில் நிறுத்திக்கொண்டு, அவனிடம் மெல்லிய குரலில் பேசுவார். ஐயப்பன் அதைப் புரிந்துகொண்டு, வகுப்பிலிருக்கும் மாணவர்களுக்கு அதைச் சத்தமாக அறிவிப்பான். இந்த "துபாஷி வேலை" இரண்டு மாதங்களுக்கு நடந்தது. ரொம்ப விநோதமான வகுப்பு அனுபவம் அது.

நான்காம் வகுப்பு ஆசிரியர் அழகர்சாமி மதிய நேரம் சாப்பிட்டுக் கொண்டே இருப்பார். என்ன பெரிய மன்னர்களின் உணவா அது? வெறும் தயிர் சாதம், எலுமிச்சை ஊறுகாய். இதைத்தான் வகுப்பின் ஜன்னலில் அமர்ந்துகொண்டு சாப்பிடுவார். பாதி சாப்பிட்டு விட்டு, தன் அருகே இருக்கும் மகேந்திரன் என்ற மாணவனை அழைத்து "டே, நீ இதைச் சாப்பிடுடா!" என்று சொல்லுவார். அவனும் ஆசிரியர் சாப்பிட்ட மீதியைச் சாப்பிடுவான். அது "குரு சேஷம்" (குரு சேடம்) என்னப்படும். ஆசிரியர் உண்ட மீதி. அவர் சாப்பிட்டு விட்டு மீதம் வைத்துவிட்ட உணவின் வழியாக குருவின் ஆசி சீடனுக்கு வரும்.

**பொடி சார்!**

ஐந்தாம் வகுப்பின் ஆசிரியர் நடராஜன், எப்படித்தான் அந்த ஆசிரியர் தொழிலுக்கு வந்தாரோ தெரியவில்லை. அவருக்கு தமிழும், ஆங்கிலமும் நடத்தும்படி பணிக்கப்பட்டிருந்தது. அவர் ஒருநாளும் பாடப் புத்தகத்தை எடுத்து வாசித்ததே இல்லை. தனக்குப் பிடித்தமான மூன்று மாணவர்களை நோட்டு எடுத்துக்கொண்டு வரச்சொல்லுவார். அவர்களைத் தனது மேஜைக்கு அருகில் நிற்க வைத்து, அவரது நோட்டில் இருப்பதை எழுதிக்கொள்ளச் சொல்லுவார். அவர்கள் எழுதிக்கொண்டதும் அதைப் பார்த்து பிற மாணவர்கள் அதைத் தங்கள் நோட்டில் நகல் செய்துகொள்ள வேண்டும். காரணம், அவருக்கு சைனஸ் என்ற சுவாச நோய் இருந்தது. கரும்பலகையில் இருந்து உதிரும் சாக்பீஸ் துகள் அவருக்கு ஒவ்வாமையை ஏற்படுத்தும் என்பதால் அவர் கரும்பலகையின் பக்கமே போகமாட்டார். அவர் தமிழ்ப்பாடமும் எடுத்திருக்கிறார். இறை வாழ்த்துப்பாடலான:

> "குற்றமெல்லாம் நல்ல
> குணமாகக்கொண்டருளும்
> உற்ற துணை நீயே. மற்றோர் துணை
> எனக்கில்லையே."

என்ற வள்ளலாரின் அகவற்பாவை

அத்துணை பக்தியாக, நிதானமாக, திருக்கோவிலில் மந்திரம் சொல்லுவது போன்று சொல்லுவார்.

"குற்றமெல்லாம்ம்ம்ம்ம்...... நல்ல
குணமாகக்கொண்டருளும்ம்ம்ம்ம்
உற்ற துணை நீயேஏஏ..... மற்றோர் துணை
எனக்கில்லையேஏஏ...."

என்று சுருதியோடு சொல்லுவார். அது வகுப்பு என்ற உணர்வு அகன்று, ஏதோ ஒரு கோவிலின் கருமண்டபத்தில் நிற்கும் உணர்வு எங்களுக்கு மேலிடும்.

எங்கள் வகுப்பில் நாற்பத்தைந்து மாணவர்கள் இருந்தோம். அந்த வகுப்பறை மேல்மாடியில் இருந்தது. அது விருதுநகர் மையப்பேருந்து நிலையத்துக்குக் கிழக்கே இருந்தது. என் மாடி வகுப்பிற்கு நேர்கீழே இருந்த கச்சேரி ரோட்டில் "காரனேஷன் அசைவ ஹோட்டல்" இருந்தது. அந்த ஹோட்டலில் காலையில் இருந்து இரவு வரை ஹிந்திப் பாடல்களை ஒலிபரப்பிக்கொண்டே இருப்பார்கள். அருகில் ஒரு பள்ளிக்கூடம் இருக்கிறதே, அங்கு மாணவர்கள் படித்துக் கொண்டிருப்பார்களே என்ற கவலையெல்லாம் அவர்களிடம் இருக்காது. எப்போதும் வாகனங்களின் போக்குவரத்து சத்தமும், அவை எழுப்பும் ஒலிகளும், மக்களின் சத்தமும், கைவண்டி இழுப்போரின் கூச்சல் சத்தங்களும், சண்டைகளும் எங்கள் பாட நேரங்களில் பெரும் இடையூறை விளைவிக்கும். அந்த வகுப்பில் நாங்கள் படிப்பதை விடவும், நாளெல்லாம் சுற்றுப்புறச் சத்தங்களைத் தொடர்ந்து கேட்டுக்கொண்டே பொழுதைக் கழித்தோம்..

நடராஜன் சாரைப் பற்றி நான் சொல்லியே ஆக வேண்டும். நல்ல பொன்னிற, வயோதிக முகம். தாடையில் எப்போதும் சவரம் செய்யப்படாத வெண்ணிறத் தாடி இருக்கும். அவரது கண்கள் எப்போதும் கூர்மையாக, இடுக்கிக்கொண்டே மாணவர்களைப் பார்க்கும். அவர் எப்போதும் சலவை செய்யப்பட்ட நீளமான கதர் சட்டையும், கதர் வேட்டியும்தான் அணிவார். அவை எப்போதும் மொடமொடப்பாக இருப்பதைப் பார்த்துவிட்டு நான் பிரமித்திருக்கிறேன். கஞ்சி போட்டுத் துவைக்கப்பட்ட அந்தத் தூய தும்பைப்பூ நிறக் கதர் ஆடைகள் அத்தனை விறைப்பாக இருக்கும். வீட்டுக்குப் போனதும் அவர் சட்டையைக் கழட்டி, ஆணியில் மாட்டும்போது, அது தவறி கீழே விழுந்துவிட்டால், சட்டை கண்டிப்பாக உடைந்துபோகும் என்றுதான் நான் எண்ணினேன். தான் வாங்கும் சம்பளத்தில் சரிபாதியை சலவைக்காரருக்குத் தருபவர்தான் எங்கள் நடராஜன் சார். பாதி சம்பளம் சலவைத் தொழிலாளிக்கு. அப்படியானால் மீதி?

டி.ஏ.எஸ் ரத்தினம் பட்டணம் பொடி கம்பெனியாருக்கு. மனிதர் சாப்பாடு கூட இல்லாமல் இருந்துவிடுவார். ஆனால் மூக்குப்பொடி போடாமல் இருக்க மாட்டார். வகுப்புக்குள் நுழைந்ததும் அவர் செய்யும் முதல் காரியம் ஒரு சிட்டிகை காரம், மணம், குணம் நிறைந்த உலகப்புகழ் பெற்ற டி.ஏ.எஸ் ரத்தினம் பட்டணம் பொடியைப் போட்டுக்கொள்வது தான். உடனே கைக்குட்டையால் மூக்கைச் சீந்துவது. சில தடவைகள் தும்முவது, இதெல்லாம் நடக்கும். அவரது கைக்குட்டை பழுப்பு நிறத்தில்தான் எப்போதும் இருக்கும் என்றால் அவர் எவ்வளவு பொடி போடுவார் என்று நீங்களே ஊகித்துக்கொள்ளலாம். அதென்ன மூக்கா? ராணுவ பீரங்கியா? இப்படியா பொடியை அதற்குள் திணிப்பது!?! நடராசன் சாருக்கு அதைப் பற்றியெல்லாம் கவலை இல்லை. வேளாவேளைக்குப் பொடி போட்டுக்கொண்டால் அவருக்குத் தேவலோக, வைகுண்ட, கைலாச, இகபர லோகங்களின் எல்லா இன்பங்களும் கிட்டிவிடும்.

இவருக்கு "மூக்குப்பொடி சார்" என்ற

சிறப்புப் பட்டம் தந்து மகிழ்ந்தனர் எங்கள் வகுப்பின் மாணவர்கள். தவறு செய்தால் அவர்களை அடிக்க மாட்டார். அவர்களை முழங்கால் போடச் சொல்லுவார். "அடே அபிஷ்டு ! ஏன்டா சேட்டை பண்ற!" என்றுதான் மாணவர்களைக் கண்டிப்பார்.

காலையில் பள்ளியின் கடைநிலை அலுவலர் வாசலில் இருந்த இரும்பு ஸ்ப்ரிங் தள்ளுக்கதவைத் திறக்கும் முன்னே இருவர் அங்கு பள்ளி வாசலில் காத்து நிற்பார்கள். ஒருவர் நடராஜன் சார், மற்றொருவன் அடியேன்தான். மேல்மாடியில் இருந்த எங்கள் கடைசி வகுப்பின் வெளியே நடராஜன் சம்மணமிட்டு அமர்ந்துகொண்டு, ஒரு கொயர்நோட்டை விரித்து வைத்துக்கொண்டு ஏதோ மந்திரங்களைச் சொல்லிக்கொண்டிருப்பார். நாங்கள் அவருக்குப் பின்னே அமைதியாக அமர்ந்துகொண்டிருப்போம். அவரது சொந்த வாழ்வில் ஏதோ கஷ்டங்கள் இருந்திருக்கலாம். அதனால் அவர் அப்படி மந்திரங்களின் வாயிலாக அவற்றுக்கு தீர்வுகாண எண்ணியிருக்கலாம். அவரது சொந்த வாழ்வைக் குறித்து நாங்கள் அறிந்துகொள்ள விரும்பவில்லை. ஓர் ஆசிரியரின் சொந்த, தனிப்பட்ட வாழ்வு என்பது அவர் பாடம் சொல்லித்தரும் மாணவர்களின் புலனாய்வுக்கு உட்பட்டது. எந்நேரமும் அவரது செய்கைகள் பிறரால் கூர்ந்து அவதானிக்கப்படும்; விமர்சிக்கப்படும்; பகடி செய்யப்படும் என்பதுதான் ஆசிரியத் தொழிலில் உள்ளவர்களுக்கு ஏற்படும் வேதனை. ஆசிரியத் தொழிலில் உள்ள பெரிய சங்கடம். ஆசிரியரின் மனைவியின் பெயர், அவரது பிள்ளைகளின் வாழ்வு, அவரது வீட்டின் நிலைமைகள் என்று சகலவற்றையும் மாணாக்கர்கள் தோண்டி எடுத்து ஆய்வு செய்துகொண்டிருப்பார்கள். பொடி சாரின் சொந்த வாழ்வைப் பற்றி அதிகமான தகவல்கள் ஏதும் எங்களுக்குக் கிடைக்கவில்லை.

ஐம்பத்து எட்டு வயதை நெருங்கிக் கொண்டிருந்தார் எங்கள் அன்புக்குரிய "மூக்குப்பொடி சார்". திடீரென்று அவர் நீண்ட விடுப்பில் போய்விட்டார். என்ன காரணம் என்று எங்களுக்குத் தெரியவில்லை. ஒவ்வொருவரும் ஒவ்வொரு காரணத்தைச் சொல்லிக்கொண்டிருந்தனர். ஒருவருக்கும் ஊர்ஜிதமான தகவல் கிட்டவில்லை. நடராஜன் சார் ஏன் லீவில் போனார் என்று எந்த ஆசிரியரிடமும் கேட்க எங்கள் ஒருவருக்கும் தைரியம் வரவில்லை. உடற்பயிற்சி ஆசிரியர் ராமர் சார்தான் நடராஜனின் வகுப்புகளை எடுத்துக்கொண்டிருந்தார். பொடி சார் கல்வித்துறையின் ஆசிரியர் புத்துணர்வு சிறப்புப் பயிற்சிக்காகப் போயிருப்பதாக நாங்கள் கேள்விப்பட்டோம்.

தலைமையாசிரியர் தாமஸ் ஹென்றி அவர்கள் கடமைக்கும் கட்டுப்பாட்டுக்கும் பெயர் போனவர். நடராஜனின் நேர் எதிர் துருவம் தாமஸ் ஹென்றி. ஆங்கிலிக்கன் கிறித்தவரான அவர், "பிரம்பைக் கையாடாதவன் தன் மகனைப் பகைக்கிறான்; அவன்மேல் அன்பாயிருக்கிறவனோ அவனை ஏற்கெனவே தண்டிக்கிறான்" என்ற பழைய ஏற்பாட்டு சாலமோன் தீர்க்கதரிசியின் வசனத்தை உறுதியாக நம்பினார். அவரது அறையின் மேஜையின் மேல் இருக்கும் பேனா, பென்சில்களின் கூட்டு எண்ணிக்கையை விட நீளநீளமான பிரம்புகளின் எண்ணிக்கையே அதிகமாக இருக்கும். படிக்காத மற்றும் சேட்டை செய்யும் மாணவர்களை அவர் பள்ளி வராந்தாவில் நிற்கவைத்து "நீட்டுறா கையை!" என்று கண்டிப்பாக ஆணையிட்டு விட்டு, எல்லோர் முன்னிலையும் அந்த மாணவனின் நீட்டப்பட்ட உள்ளங்கையில் ஐந்து அடிகளாவது அடிப்பார். அதைப் பார்த்துக்கொண்டிருக்கும் எங்களுக்கே முதுகுத்தண்டு நடுங்கும் என்றால் அந்த அடிகளை வாங்கும் மாணவனின் நிலைமையை நீங்களே ஊகித்துக்கொள்ளலாம்.

ஐந்தாம் வகுப்பின் ஆண்டுத் தேர்வுகள் முடிந்து, விடுமுறை முடிந்து, நான் பள்ளிக்குத் திரும்பினேன். புதிய வகுப்பில் அமர்ந்திருந்த என் பழைய வகுப்பின் தோழர்கள் என்னைப் பார்த்து,

‘நீ இங்க வராத. உன்னைய அந்த ஹை-ஸ்கூலுக்கு மாத்திட்டாங்க’ என்றார்கள். எனக்கு ஒன்றும் புரியவில்லை.

‘நடராஜன் சார் எங்க?’ என்று கேட்டேன்.

‘அவர் வேலையில இருந்து ரிட்டையர் ஆகிட்டாரு’ என்றார்கள்.

ஆண்டு இறுதித் தேர்வில் அவரது முகத்தைக் கடைசி தடவையாகப் பார்த்ததுதான். அப்புறம் நான் பார்க்கவே இல்லை. ஆனால் அந்த ஆண்டில் முழுப்பரிட்சையில் தோற்றுப்போன என் வகுப்புத்தோழன் பழனிச்சாமி தான் பரிட்சையில் தோற்றதற்குப் பொடி சார்தான் காரணம் என்று எண்ணிக்கொண்டு அவர் தெருவில் போகும்போது, தான் அவர்மீது கல்லெறிந்ததாக என்னிடம் சொன்னான்.

**புதிய பள்ளி:**

ஆறாம் வகுப்பில் சேருவதற்கு நான் எனது மாற்றுச் சான்றிதழை வாங்கிக்கொண்டு போன பள்ளி, க்ஷத்திரிய வித்தியாசாலை ஆகும். அங்கு நான் ஆங்கில வழி போதனை வகுப்பில் சேர்ந்தேன். சேர்க்கப்பட்டேன் என்பதுதான் சரியான பதம். நான் கேட்காமலேயே எனக்கு அந்த ஆங்கில வழி வகுப்பு தரப்பட்டது. புதிய பள்ளி., புதிய சூழல்., புதிய மாணவர்கள்., புதிய ஆசிரியர்கள்., புதிய தலைமையாசிரியர் என்று எல்லாமே புதிதாக அமைந்திருந்தது.

என் பழைய பள்ளி என் வீட்டிலிருந்து முன்னூறு மீட்டர் தூரத்தின்தான் இருந்தது. ஆனால் என் புதிய பள்ளியோ இரண்டு கிலோ மீட்டர் தூரத்தில் இருந்தது. தினசரி என் பையையும் சோத்துச் சட்டியையும் சுமந்துகொண்டு, காலையில் எட்டு நாற்பது மணி ஆவதற்குள் பள்ளி வளாகத்துக்குள் நுழைந்துவிடுவேன். பெரிய வளாகம். வளாகம் எங்கும் மரங்கள். விசாலமான, காற்றோட்டமான வகுப்புகள். அதிகம் ஜன சந்தடி இல்லாத அமைதியான சூழல். கண்டிப்பான ஆசிரியர்கள். இந்தப் புதிய பள்ளியில் எனது பள்ளிப் படிப்பின் இன்னொரு புதிய அத்தியாயம் தொடங்கியது. அடியேனின் நினைவுத் தடங்களாக நீங்காது நிற்கும் அந்நாளைய நிகழ்வுகள். எத்தனையோ சம்பவங்கள். எத்தனையோ எண்ணங்கள். அலை அலையாய் அவை இன்னமும் என் ஆழ்மனதில் உறைந்து கெட்டிதட்டிப் போய்விட்டது.

rameshzillion@hotmail.com ■



கவிதை

**மு.முபாரக்**

மௌனம் காற்றாக
கடந்துகொண்டிருக்கும் இரவு,
குஞ்சுப்பறவையின்
குதுகலமான சத்தம்,
கடைசி பேருந்து
சென்ற பிறகு
நிழற்குடையில்
நிம்மதியாய் உறங்கும் நாய்க்குட்டி,
கடைசி உணவையும்
மிச்சமாகாமல் விற்றுவிட்ட மகிழ்ச்சியில்
தள்ளுவண்டி கடைகாரனின் முகம்,
பகலா இரவாயென
அறிய முடியாதவாறு
வெளிச்சத்தை அள்ளித்தெளிக்கும்
நிலவு,
பிடிக்காமல் வசிக்கும்
நகரத்தை கொஞ்சம்
பிடித்திருக்கிறது இப்போது!

ammubarak2011@gmail.com ■



சிறுகதை

வாசுதேவன் அருணாசலம்

# ஓசையும் ஆசையும்

அமிர்தா எக்ஸ்பிரஸ் மெல்ல ஊர்ந்து பழனி இரயில் நிலையத்திற்குள் காலை சரியாக 7.20 மணிக்கு நுழைந்துகொண்டிருந்தது. சந்திரா (இதற்கு முன் "சந்திரன்") ஓட்டமும் நடையுமாக இரயில் நிலையத்தை நெருங்கிக்கொண்டிருந்தாள். இரயில் பெட்டி எண் எஸ் 8-ல் ஏறினாள். கல்லூரிப் படிப்பை முடித்துவிட்டு வேலை தேடினாள். ஆனால் சட்டென்று இப்படி ஒரு முடிவை எடுத்தாள். எத்தனையோ வேலை வாய்ப்புகள் தேடிவந்தன. அனைத்தையும் மறுத்துவிட்டாள். பழனியில் பழைய இரயில்வே குடியிருப்பு பக்கத்திலிருக்கும் ஒரு சிறிய வீட்டில் தன் அம்மாவுடன் வசித்து வருகிறாள். அம்மாவிற்கு திடீரென்று ஏற்பட்ட உடல்நலக் குறைவு இப்படியொரு வேலையை அவள் தேடிக்கொண்டதற்கு அவள் கண்டுபிடித்த வலுவான காரணம். சிறிய தோல்பையைத் தோளில் தொங்கவிட்டவாறு இரயில் பெட்டிகளினுள்ளே நடக்க ஆரம்பித்தாள். பழனி முருகன் கோயிலை நோக்கிக் கும்பிட்டுவிட்டுத் தன் வேலையைத் தொடர்ந்தாள்.

"படார்" என்று தன் இரு கைகளையும் வலுவாக அடித்து ஓசை எழுப்பி வலது பக்கம் திரும்பினாள். அந்த கம்பார்ட்மெண்டில் எட்டுப் பயணிகள் இருந்தனர். சந்திரா எழுப்பிய சத்தத்தில் ஒரு பெண் பயணி உலுக்கியே விழுந்தாள். ஒரு மூதாட்டி சந்திராவை மேலும்கீழும் பாரத்துவிட்டு தன்னுடைய பெரிய பையிலிருந்து ஒரு சின்னத் துணிப்பையை எடுத்தார். அதிலிருந்து ஓர் இரண்டு ரூபாய் காசை சந்திராவிடம் நீட்டினார். சந்திரா ஒன்றும் சொல்லாமல் அதை வாங்கிக்கொண்டாள்.. "ஓன் மகென் ஒருத்தன்கூட ஓன் சாவுக்கு வரமாட்டானுங்க! நீயெல்லாம் அனாதைப் பொணம்தான்டி! கொடுக்குறா பாரு!" என்ற வார்த்தைகள் அவள் மனதில் தோன்றி வெளியில் வராமல் உள்ளேயே கிடந்தது. இடதுபக்கம் திரும்பினாள். ஓர் இளைஞன் நீலநிற டி-சர்ட்டில் கையில் கைபேசியுடன் காதுகளில் ஹெட்போனுடன் ஜன்னல்வழியே வெளியே பார்த்துக்கொண்டிருந்தான். சந்திரா அவனருகில் சென்று மீண்டும் ஒரு "படார்." அந்த இளைஞன் அதிர்ந்தவனாய் திருப்பி "என்ன?" என்றான். அவனுடைய எதிர் இருக்கையில் அமர்ந்திருந்த ஒரு முதியவர் "தம்பி! ஏதாவது கொடுங்க!" என்றார். அந்த இளைஞனுக்கு அப்போதுதான் புரிந்தது. தன்னுடைய பேண்டின்

பின்பாக்கெட்டிலிருந்து தனது பர்ஸை எடுத்தான். அதிலிருந்து ஒரு பத்து ரூபாய் நோட்டை எடுத்து நீட்டினான். மீண்டும் “ஒரு படார்.” அந்த வாலிபனைத் தொடாமல் அவனது முகத்தைத் தன்னுடைய கைகளால் வழித்துத் தழுவுவது போல் காற்றில் தழுவிப் பணத்தைப் பெற்றுக்கொண்டாள். “இவனுக்கு சீக்கிரம் கல்யாணம் ஆகட்டும். நல்ல அழகான மனைவி கிடைக்கட்டும்” என்ற வார்த்தைகள் சந்திராவின் மனதில் ஒலித்து மெதுவாக மறைந்தது. சில வினாடிகள் அங்கிருந்துவிட்டு யாரும் இனி எதுவும் தரமாட்டார்கள் என்பதை உணர்ந்து உறுதிப்படுத்திக்கொண்டு அடுத்த கம்பார்ட்மெண்டிற்கு நகர்ந்தாள்.

மீண்டும் ஒரு “படார்.” ஐந்து பயணிகள் அங்கிருந்தனர். இருவர் மட்டுமே சந்திராவின் ‘படார்’ ஓசைக்கு அசைந்தனர். மொத்தத்தில் ஐந்து ரூபாய் கிடைத்தது. அடுத்த கம்பார்ட்மெண்டிற்கு நகர்ந்தாள். மீண்டும் “படார்.” எட்டுப் பயணிகள் அங்கிருந்தனர். நடுத்தர வயதுடைய ஒருவர் தன் மனைவியிடம் கையை நீட்டினார். “கொஞ்சம் சும்மா இருங்க! அதெல்லாம் ஒன்னும் வேண்டாம்!” என்றாள். அடங்கிப்போனார். “உன் புருஷன் உன்னைவிட்டு சீக்கிரம் ஓடிவிடுவான்டி. சேத்து வைச்சு எங்க கொண்டு போப்போற? பேதி புடுங்கிப் பொட்டுன்னு போவடி!” சந்திராவின் மனதின் ஓசை சற்று கோரமாக இருந்தது. இடது பக்கம் திரும்பினாள். கண்ணாடி அணிந்திருந்தான் அந்த இளைஞன். ‘சந்திரா எப்போது தன்பக்கம் திரும்புவாள்’ எனக் காத்திருந்தவன் போல், எழுந்து நின்றான். காலில் கிடந்த தனது செருப்புகளைக் கழற்றினான். தன் இரு கைகளைச் சேர்த்து, சந்திராவை வணங்கி நின்றான். சந்திரா அவனுடைய கன்னங்களைத் தொட்டும் தொடாமலும் தன் இருகைகளால் தழுவி, தன் தலையின் இருபுறங்களில் தனது கைவிரல்களை மடக்கி அழுத்தினாள். இரண்டு மூன்று சொடக்குகள். தன்னுடைய சட்டைப்பையிலிருந்து ஒரு நூறு ரூபாய் நோட்டை எடுத்துக் கொடுத்தான். “ராசா! நீ நாடாளுவடா!” என்ற வார்த்தைகளின் ஓசை ஆசையாய் சந்திராவின் மனது ஒலித்தது. அந்த இளைஞனுடைய பவ்யமும் பக்தியும் சந்திரா போன்றவர்களின் மீதிருந்த “சிவசக்தி” நம்பிக்கையைச் சற்று உறுதிப்படுத்தி, சந்திராவிற்கு உள்ளூர ஒருவிதக் கூச்சத்தை ஏற்படுத்தியது.

அடுத்த கம்பார்ட்மெண்டிற்கு நகருவதற்குமுன் தன் எதிரில் பயணச்சீட்டு பரிசோதகர் சிபி வந்துகொண்டிருந்ததைப் பார்த்தாள். அங்கேயே ஏதாவது காலியாக இருக்கும் இருக்கையில் அமர்ந்து அவரது பார்வையிலிருந்து தப்பித்துவிடலாமா அல்லது அப்படியே திரும்பிவந்த பக்கமே போயிவிடலாமா என்று எண்ணுவதற்குள் சிபி அவள் அருகில் வந்து சேர்ந்தார். “ஸ்டேசன் மாஸ்டரை இன்ன போயி நோக்கு... எந்தின பிடிவாதம் நினக்கு! ஈ... நல்ல ஜீவிதமா?” என்றார் சிபி. அவருடைய வார்த்தைகளில் கோபமும் ஈரமும் ஒருசேரக் கலந்திருந்தது. திண்டுக்கல் ஸ்டேசன் மாஸ்டர் நல்லதம்பி பல நாட்களாக சந்திராவுக்கான ஒரு வேலையை ஒதுக்கி வைத்திருந்தார். ஆனால் சந்திரா எதையாவது சொல்லி தட்டிக்கழித்து வந்தாள். அவளுடைய அம்மா அவளுக்கு ஒரு காரணம். “இன்னைக்கு எப்படியும் அவரப் பாத்து பேசிடுறேன் சார்” என்றாள் சந்திரா. குறுக்கே நின்றுகொண்டிருந்த சந்திராவைத் தன்னுடைய கறுப்புநிற கோட் கூடப் படாமல் கவனமாக சந்திராவைக் கடந்துசென்றார். இப்படிச் செல்வதை சந்திரா பலமுறை கவனித்திருக்கிறாள். ‘ஏதும் தீண்டத்தகாதவளாக தன்னை நினைத்து அதைச் செய்கிறார்’ என்ற எண்ணம் சந்திராவிற்கு என்றுமே வந்ததில்லை. அதை ஒரு கண்ணியத்தின்

வெளிப்பாடாகவே பார்த்திருந்தாள். அவளுடைய மனதின் ஓசை அவளையும் மீறி ஒலித்தது "நல்ல வாழ்க்கை, நல்ல மனைவி, நல்ல பிள்ளைகள், உங்களுக்குக் கட்டாயம் அமையும்." சில வினாடிகள் சிபியைப் பார்த்துக்கொண்டிருந்து விட்டு அடுத்த கம்பார்ட்மெண்டிற்கு நகர்ந்தாள்.

இரயில் திண்டுக்கல் ஸ்டேசனை 8.45 மணிக்கு நெருங்கியது. ஐந்து நிமிடங்கள்தான் தாமதம். தனது வேகத்தை முற்றிலும் குறைத்து மூன்றாவது நடைமேடையை நோக்கி அசைந்து அசைந்து ஊர்ந்துசென்று நிற்க முயற்சித்துக்கொண்டிருந்தது. சந்திரா ஜன்னல் வழியாக சற்று குனிந்து, வெளியே எதையோ யாரையோ தேடுவதுபோல் தானிருந்த கம்பார்ட்மெண்டிலிருந்து பார்த்துக்கொண்டிருந்தாள். ஸ்டேசன் மாஸ்டர் நல்லதம்பியின் பார்வையில் சிக்கிவிடக் கூடாது என்ற எண்ணம் மட்டும் அவளுக்குள் தொடர்ந்து ஒலித்துக்கொண்டிருந்தது. அவள் இருந்த பெட்டி, நடைமேடையில் தனது அறைக்கு வெளியே நின்றுகொண்டிருந்த நல்லதம்பியைக் கடந்தது, சுமார் ஐம்பது அடி தூரத்தில் நின்றது. தனியாக இறங்கிச் சென்றால் அவருடைய பார்வையில் அகப்பட்டுவிடுவோம் என்ற பீதியில் ஒரு வாசலில் நான்கு பேர் இறங்குவதற்குத் தயாராக நின்றுகொண்டிருந்தவர்களோடு சந்திரா சேர்ந்துகொண்டாள். இரயில் நின்றதும் அவர்களுடனேயே இறங்கி அவர்களில் ஒருவராக ஸ்டேசனை விட்டு வெளியேறினாள். நல்லவேளை நல்லதம்பியிடமிருந்து தப்பித்தோம் என்று நினைத்துக்கொண்டே அங்கே நின்றுகொண்டிருந்த சிற்றுந்தில் ஏறி திண்டுக்கல் மலைக்கோட்டைக்குச் சென்றாள். அங்கேயும் படார்... படார் ஓசைகள்....மொத்தம் ரூபாய் 220 தேறியது.

மாலை 4.30 மணிக்கு மீண்டும் திண்டுக்கல் ஸ்டேனுக்கு திருப்பினாள். நல்லதம்பியிடம் சிக்கிக்கொள்ளக் கூடாது என்ற கவனத்தோடு உள்ளே நுழைந்தாள். முதல் நடைமேடையில் அவருடைய அறை எதுவென்று அவளுக்குத் தெரியும். அதைச் சற்று வேகமாகக் கடந்து அந்த நடைமேடையில் கடைசியாக அமைக்கப்பட்டிருந்த சிமெண்ட் இருக்கைக்குச் செல்வதுதான் அவளது வழக்கம். அன்றும் அவ்வாறு அவரது அறையைக் கடந்தாள். "சந்திரா!" என்ற உரத்த குரல் அந்த அறையிலிருந்து வெளிவந்தது. சந்திரா உறைந்து அங்கேயே நின்றாள். நல்லதம்பி அறையைவிட்டு வெளியே வந்தார். சந்திராவும் திரும்பி அவரை நோக்கி வந்தாள். "சிபி எதுவும் சொன்னாரா? ஏன் இப்படி இருக்க! சொன்னா கேளு! நல்ல டீசன்டான வேலை. உங்கள மாதிரியான ஆட்களுக்கான ஒதுக்கீடு அது. மிஸ் பண்ணிடாத!" என்ற அவருடைய வார்த்தைகளில் கண்டிப்பை விட இரக்கம் சற்று அதிகமாகவே இருந்தது. அம்மாவிடம் கேட்டுவிட்டு கட்டாயம் இரண்டு மூன்று நாட்களுக்குள் பதில் சொல்லுவதாகச் சொல்லி மெல்ல அங்கிருந்து சந்திரா நகர்ந்தாள்.

மாலை 05.05 மணிக்குச் சரியான நேரத்திற்கு அமிர்தா எக்ஸ்பிரஸ் பழனி வழியாகத் திருவனந்தபுரம் செல்ல திண்டுக்கல் இரயில் நிலையத்தின் முதல் நடைமேடைக்கு வந்தது. பெட்டி எண் எட்டு சந்திரா அமர்ந்திருந்த சிமிண்ட் இருக்கைக்கு எதிராக வந்து நின்றது. பயணிகள் ஏறிக்கொண்டிருந்தார்கள். கடைசியாக சந்திரா அந்தப் பெட்டியில் ஏறினாள். இரயில் புறப்பட்டது. சந்திரா ஆரம்பித்தாள். "படார்"... "படார்..." முதல் கம்பார்ட்மெண்ட் முடிந்தது. அடுத்ததற்கு சென்றாள். இருவர் மட்டுமே அங்கே இருந்தார்கள். அங்கே ஒரு "படார்." ஜன்னலுக்கு வெளியே பார்த்துக்கொண்டிருந்த ஒரு பெண் திரும்பினாள். சந்திராவிற்குத் தூக்கிவாரிப்

போட்டது. பத்மாவதி. தனது அம்மாவின் நெருங்கிய தோழி. சந்திராவைப் பொறுத்தவரையில் பத்மாவதி "பத்மா... வத்தி." 'சித்தி' என்றுதான் சந்திரா அவளை அழைப்பாள். பத்மாவதிக்கும் சந்திராவை மிக நன்றாகத் தெரியும். ஒருகணம் ஒருவரையொருவர் கண்கொட்டாமல் பார்த்துக்கொண்டே இருந்தனர். சந்திரா மெதுவாகச் சென்று பத்மாவதியின் பக்கத்தில் அமர்ந்தாள். "எப்படி சித்தி இருக்கீங்க?" என்றாள். அதற்குப் பதில் எதுவும் பத்மாவதியிடமிருந்து வரவில்லை. "எங்க அக்கா எப்படியிருக்கு?" என்றாள். "நல்லா இருக்கு, சித்தி! இப்ப வேலைக்கெல்லாம் போறதில்லை" என்றாள் மெல்லிய குரலில். பின் மெதுவாகத் தயங்கியவாறு ஆரம்பித்தாள் சந்திரா. "சித்தி, அம்மாவுக்கு இது எதுவும் தெரியாது. நான் ஏதோ வேலைக்குப் போயிக்கிட்டு இருக்கேன்னுதான் அது நெனச்சுக்கிட்டு இருக்கு. நீ எதுவும் சொல்லிடாத!" என்று தழுதழுத்தக் குரலில் கெஞ்சினாள். "இதுதான் எனக்கு வேலையா? நான் ஏன் சொல்லப் போறேன்?" என்று கடிந்தாள். பத்மாவதியின் குணம் சந்திராவிற்கு நன்றாகத் தெரிந்திருந்ததால் தான், அவளிடம் அப்படிக் கெஞ்சினாள். சில வினாடிகள் அங்கிருந்து விட்டு சந்திரா கிளம்பினாள். அடுத்த பெட்டிக்குப் போகும்வரை அந்தப் பெட்டியில் எந்தவித "படார்" சத்தமும் ஒலிக்கவில்லை.

மறுநாள் மாலை 05.10 மணிக்கு திண்டுக்கலிருந்து அதே அமிர்தா எக்ஸ்பிரஸ் இரயில் புறப்பட்டது. நேற்று பத்மாவதியைச் சந்தித்ததிலிருந்து சந்திராவிற்கு ஒருவிதக் கலக்கம் இருந்துகொண்டேயிருந்தது. கம்பார்ட்மெண்ட்களில் சென்று "படார்" ஒலி எழுப்புவதற்குமுன் அங்கே இருக்கும் அனைத்து பயணிகளையும் ஒருமுறை நோட்டமிட்டுக்கொண்டாள். அன்று முழுவதும் பார்ப்பவர்கள் அனைவருமே பத்மாவதியைப் போலவே சந்திராவிற்குத் தோன்றியது. எப்படியோ அந்த நாள் ஒரு முடிவுக்கு வந்தது. மொத்தம் 420 ரூபாய். 06.05 மணிக்கு இரயில் பழனியை நெருங்கியது. திடீரென்று பழனி இரயில் நிலையத்திற்கு முன் ஒரு கிலோமீட்டர் தூரத்தில் வண்டி சக்கரங்கள் சட்டென்று நிற்கும் சத்தத்துடன் நின்றது. என்னவென்று தெரியவில்லை. சிபி ஒருவிதப் பதற்றத்துடன் சந்திரா நின்றுகொண்டிருந்த கம்பார்ட்மெண்டைக் கடந்து ஓடினார். சுமார் ஒருமணி நேரமாகியும் இரயில் நகரவில்லை. யாரிடமும் கேட்டுத் தெரிந்துகொள்ள சந்திராவிற்கு ஆர்வமில்லை. சிக்னல் பிரச்சினையாகத்தான் இருக்கும். சற்றுநேரத்தில் கிளம்பிவிடும் என்ற எண்ணத்திலிருந்த சந்திராவிற்கு நேரமாக ஆக அம்மா தனியாக எதிர்பார்த்துக் கொண்டிருப்பாளே என்ற எண்ணம் ஒருவிதக் கலக்கத்தை உண்டாக்கியது. 'இறங்கி மெதுவா நடந்தே வீட்டுக்குப் போயிடலாமா?' என்று யோசித்தாள். இரயிலிருந்து இறங்க முயற்சித்தாள். இரயின் ஒலிப்பான் நெடிய ஓசையை எழுப்பியது. இரயில் புறப்படத் தயாரானது. சந்திரா இறங்காமல், வெளியே பார்த்துக்கொண்டே வாசலிலேயே நின்றுவிட்டாள். இரயில் நகர்ந்து, ஊர்ந்து செல்ல ஆரம்பித்தது. எந்தக் காரணத்திற்காக இரயில் அவ்வளவு நேரம் அங்கு நின்றது என்பது அவள் பார்த்த அந்தக் காட்சியைக் கடக்கும்போதுதான் தெரியவந்தது. நான்கு காவலர்கள் நின்றுகொண்டிருந்தார்கள். மூன்று இடங்களில் கிடந்த குவியல்கள் துணியால் மூடப்பட்டிருந்தன. பக்கத்தில் ஒரு வெள்ளைநிற ஸ்ட்ரெச்சர் இருந்தது. சந்திராவிற்குச் சட்டென்று புரிந்துவிட்டது. யாரோ இரயிலில் அடிபட்டு இறந்திருக்கிறார்கள் என்று. எத்தனை பேர் என்பது தெரியவில்லை. இரயில் பழனி இரயில் நிலையத்தை அடைந்தது. சந்திரா இறங்கி தனது வீட்டை நோக்கி வேகமாக

நடந்தாள். தான் பார்த்த காட்சி அவளை ஒருவித கலக்கத்திலேயே வைத்திருந்தது. வீடுவந்து சேர்ந்தாள். கதவு வெளியில் தாளிடப்பட்டிருந்தது.

நான்கு நாட்களுக்குப்பின் காலை 07.00 மணிக்கு அமிர்தா எக்ஸ்பிரஸ் பழனி இரயில்நிலையத்தில் திண்டுக்கல் வழியாக மதுரை செல்ல ஊர்ந்து மெல்ல நுழைந்துகொண்டிருந்தது. சரியாக ஐந்து நிமிடத்திற்குப் பின் புறப்பட்டது. சிபி உள்ளே பயணிகளின் பயணச்சீட்டை பரிசோதித்துக் கொண்டிருந்தார். அடுத்த கம்பார்ட்மெண்டிற்கு சென்றார். பயணச்சீட்டுகளைப் பரிசோதித்தார். "சீட் நம்பர் லெவன்? நின்னலானோ?" என்ற வார்த்தைகளுடன் சில நிமிடங்கள் திகைத்து நின்றார். கண் கலங்கியவளாக அங்கே அமர்ந்திருந்தாள் சந்திரா.

vasuaruntamil@gmail.com ■



கவிதை

**தங்கேஸ்**

நீ காசுக்கடை சந்தில்
நுழைந்து போகும் முன்பே
ஒரு நட்சத்திரத்திற்கும்
மறு நட்சத்திரத்திற்கும்
பத்து முறை
போய் வந்து விடுவேன்

நீ கைப்பை நிறைய
மளிகைச் சாமான்களோடு
வந்திறங்கும் முன்பே
இரவை ஒரு கருந்திரவமாக்கி
ஒரு சொட்டாவது
அருந்திவிடுவேன்

உன் கனவுகளுக்குள்
நான் அத்துமீறி
அலைந்து கொண்டிருப்பதை
நீ புகாரளித்துக்கொண்டிருக்கும்
வேளையில்

விரக்திப்புன்னகை மாறாமல்
பாரி மகளிரைப் பற்றிய
கரங்களோடு
என் வீதியில் எதிர்ப்படும்
கபிலரை
குசலம் விசாரித்து
அனுப்பிக்கொண்டிருப்பேன்

தென்னங்கீற்றின் நுனியில்
கண்களை உருட்டிக்கொண்டு
இன்றைய இரவை உணவாக்கும்
ஆசையில் கொடியாய்
நெளிந்து கொண்டிருக்கும்
பச்சை பாம்பிடம்
பிரபஞ்சத்தை பற்றி
கதைத்து கொண்டிருப்பேன்

thanges1970@gmail.com ■

# உடைந்த நிலா

கவிதை ஜெயானந்தன்

உடைந்துப்போன
நிலா,
முற்றத்தில் பாய்ந்து
ஒய்யாரமாய் தவழ்ந்தது
வாழ்வற்ற வீட்டில்.

சாய்வு நாற்காலியில்
சாய்ந்த
கல்யாணராமன்,
வகிடெடுத்துப் போன
வாழ்வின் சேதாரங்களை
எண்ணிக்கொண்டே இருந்தார்.

அரவமற்ற
பூஜை அறையின் ஓரத்தில்
ஓய்வெடுத்த
சாரதாவின்
விரல் பதிந்த,
வீணை
தனியாகத்தான்
சோகமிசைத்தது.

"வாழ்வில் கடைசிவரை வருவேன்",
சொல்லியவளை
எங்கிருந்தோ
வந்த எமன்
தேரிலே ஏற்றிச்சென்றான்.

நான்
ஒத்தை
பனைமரம்
புலம்பி அழுதார்
கல்யாண ராமன்.

அரவணைத்து
வளர்த்த
மகனின்
வெளிநாட்டு
மாட்டுப்பெண்
பாத்ரூம் நாற்றாத்தால்
இந்த கிராமத்தின்
மண்ணை மிதிக்காமல்,
மகனையும் அள்ளிச்சென்றாள்

நுனிநாக்கு ஆங்கிலத்தில்
அத்தோடு சென்றது
அவரது வம்சாவளி.

எப்பவும் போல்
சங்கீதத்தோடு ஓடும்
காவிரி தான்
இன்னுமும்
கல்யாணராமனுக்கு
தாயாக தெரிகின்றாள்.

ஒரு சொட்டுக் கண்ணீர்க்கூட
இந்த மண்ணில்தான் விழவேண்டும்.
கடைசி மூச்சும்
காவிரியோடு கலக்க வேண்டும்
மனதில் ஆயிரம் எண்ணங்கள்.

உத்தரத்தில்
கூடு கட்டி
குடும்பத்துடன் வாழும்
அந்த
சிட்டுக்குருவியுடன் தான்
பேசிக்கொண்டிருந்தார் ராமன்
தனிமையில்
கொஞ்சம் வாழ்வின்
நம்பிக்கையோடு.

தூரத்தில்
வைத்தீஸ்வரன் கோயில்
மணி ஓசை,
கல்யாணராமன்
வீடெங்கும் புகுந்து
குடித்தனம் நடத்தியது.

சிட்டுக்குருவிகள்
முற்றத்தில் விளையாடி
தொலைந்து போன
வாழ்வின்
சங்கீதங்களைப் பாடியது.

ஆடும் நாற்காலிகள்
ஆடிக்கொண்டுதான் இருக்கின்றன.

jpjayanandan@gmail.com ■





கட்டுரை

இளையவன் சிவா

# மொழியில் வழியும் வனத்தாயின் பசுங்கரங்கள்


றைய ஆய்வு நூல்கள், கட்டுரை நூல்கள், உரைநூல் தொகுப்பித்த நூல்கள் என தமிழின் பல்வேறு தளங்களில் இயங்கிவரும் மகராசன் அவர்கள் ஏர் இதழை நடத்தியவர். பெண்மொழி குறித்த ஆய்வில் முனைவர் பட்டம் பெற்றவர். தஞ்சாவூர் தமிழ்ப் பல்கலைக்கழக நாடகத்துறையில் நாடகக் கலைச்சொல் களஞ்சிய அகராதி உருவாக்கத்தில் திட்ட தகைமையராக பணியாற்றியவர். தமிழ்ச் சமூகம், மொழி, கலை, இலக்கியம், வரலாறு, பண்பாடு, கல்வி தொடர்பாக பல்வேறு நூல்களை எழுதி இருக்கிறார். அறிவுச் செயல்பாடுகளுக்கு உதவும் வகையில் செம்பச்சை நூலகம் ஒன்றை உருவாக்கி இருக்கிறார், மக்கள் தமிழ் ஆய்வரண் மற்றும் வேளாண் மக்கள் ஆய்வுகள் வட்டம் வழியாகச் சமூகப் பண்பாட்டியல் ஆய்வுகளை மேற்கொண்டு வருகிறார். இவரது இரண்டாவது கவிதை தொகுப்பு நிலத்தில் முளைத்த சொற்கள்.

அவரவர் ஆதி

அவரவர் உயிருக்குள்

அவரவர் வழித்துணை

அவரவர் எண்ணத்தில்

அவரவர் தாயும்

அவரவர் நிலமும்

ஒன்றென எண்ணும்

உள்ளம் வாய்த்திடில்

அவரவர் பண்பாடு

அடுத்தடுத்து சிறப்பாகும்

என்பதையே ஆதாரமாக்கும் கவிதையுடன் ஆரம்பிக்கிறது இந்த நூல். நிலமிழந்து போனால்

பலமிழந்து போகும்
பலமிழந்து போனால்
இனம் அழிந்து போகும்
ஆதலால் மானுடனே
தாய் நிலத்தை
காதலிக்கக் கற்றுக்கொள்.

நிலமும் நிலத்தின் வழியே நீளும் உறவும் உறவுகளின் நகருதலில் விளையும் சொற்களுமே எல்லாவற்றின் ஆதி என எழுந்து நிற்கிறது. மனிதன் தனித்துவமானவன் அல்ல. கூட்டு வாழ்க்கையில் எல்லா நிலையிலும் அவன் சார்ந்து வாழ்வது நிலத்தையும் நிலத்தில் முளைத்திடும் நம்பிக்கையையும் அல்லவா. தன்னை நிறைத்து காற்றின் வெளியில் மண்ணை சுவாசிக்கும் ஆதிக்குடிகளின் பண்புகளை தனக்குள் வைத்திருக்கும் மனிதன் நாகரீகத்தை ஏந்தத் தொடங்கிய போதும் தொன்மங்களின் தன்மைகள் வழிகாட்ட வந்துநிற்பதை உணர முடிந்தவனாகி விடுகிறான். உழன்றும் உழவே தலை என்ற ஐயனின் வாய்ப்பாட்டில் இன்றைக்கு நிறைய பேருக்கு ஐயம் நிறைந்து விடுகிறது. இதுவே அவரவர் மண்ணை வெற்று நிலம் என்று நம்பவைத்து விடுகிறது. நிலம் நம்மைத் தாங்கும் உயிர்பை என்பதை உணராத தலைமுறையினருக்கு மண்ணும் கல்லுமே நிலம் ஆகி விடுகிறது.

ஆதிமனிதன் தன்னையே ஒப்படைத்து நிலத்தைச் சீராக்கி அதிலேயே தன் ஆயுளையும் வளர்த்துக்கொண்டு சந்ததிகளை நீட்டித்தல் என்பது நிலம் அவனுக்கு வழங்கிய கொடை என்பதை இன்றைய மனிதர்களுக்கு உணர்த்துதல் காலத்தின் கட்டாயம் ஆகிவிடுகிறது. உழுதவனின் பாடுகள் உரைக்க முடியாத சூழலில் வானம் பொய்த்து பயிரை கருக்குகிறது. ஆளும் அதிகார வர்க்கமும் வாழ்வை நகர விடாமல் இருட்டுக்குள்




தள்ளுகிறது. இயற்கையின் சீற்றமும் புயலும் மழையும் மொத்தமாக வேரோடு பிடுங்கி எறிகிறது. காடுகளும் மேடுகளும் தரிசுகளாகத் திரிவதை எந்த உழவனாலும் சகித்துக்கொள்ள முடியாமல் சவலைப்பிள்ளையின் மீது கரிசனம் காட்டும் தாய்மையைப் போல நிலத்திலேயே கதி எனக் கிடக்கிறான் உழவன். இயற்கையை ரசித்து அதன் வாழ்வியலை வழிகாட்டுதலையே உழவுக்கான வழி என்று ஏந்தி நடந்திடும் உழவனின் பாடுகளை சொற்கள் எங்கும் எடுத்துச்சென்று மனங்களுக்குள் விதைக்க தொடங்குகின்றன. அதுவே

"கருப்பம் கொண்ட
பிள்ளைத்தாய்ச்சியாய்

உயிர்த்தலைச் சுமக்கின்றன
நிலம் கோதிய சொற்கள்"

*என நிலத்தையே தனக்கான ஆதித்தாயாக கவிஞரை வணங்க வைக்கிறது.*

*தமிழ் மொழி, தமிழின் பண்பாட்டுச் சித்திரங்கள், அதன் வழியான நாகரீக அசைவுகள், தமிழ் ஈழம் என தன்னை முழுமைக்கும் தமிழுக்குள் ஒப்புக்கொண்டு சமுதாயத்தில் பண்பாட்டின் அடுத்த நகர்தலை தமிழுக்கானதாக மாற்றிக்கொள்ளத் துடிக்கின்றன இதில் முளைத்திருக்கும் எழுத்துப் பயிர்களும் அவை விளைத்திடும் கருத்துக் கதிர்களும்.*

*இறை வழிபாடுகள் தொடங்கியதன் வரலாற்றை ஆய்வுசெய்கையில் மனிதனின் பயமும் அச்சமும் அவநம்பிக்கையும் புற வாழ்வின் நெருக்குதல்களில் இருந்து அவனை பாதுகாத்துக்கொள்ள ஏதோ ஒன்றை நாடிச்செல்லத் தூண்டுகின்றன. அதுவே அவர்களுக்கு ஒற்றைக்கல்லையும் தெய்வமென வணங்கும் உயிர்த்தன்மையைக் கொடுத்தன. நதிகளும் நாகரீகங்களும் வளர்த்துவிட்ட நற்பொழுதில் தான் குடிசைகளில் இருப்பினும் கடவுளைக் கட்டிடம் கட்டி கோபுரத்தில் அமர்த்தி கருவறைக்குள் வைத்து வணங்கிடத் துடித்திட்ட கரங்களின் முயற்சியில் நம்பிக்கைகள் பலித்தன. ஆயினும் மண்ணும் மண்ணைச் சார்ந்த மனிதர்களும் தங்களுக்கான வாழ்வை வாழமுடியாது இயற்கையோ இடர்பாடுகளோ இடையூறுகள் தந்து நிலத்தை நஞ்சாகி விட்டபின் ஆலயங்கள் கவனிப்பாரற்று இருண்டு போகின்றன. புஞ்சையும் நஞ்சையும் புழுதியும் பறிபோன பின்னே எல்லாத் திசைகளையும் வெறுத்துப் பார்க்க மட்டுமே முடிகிறது இழந்தவன் பாடு. வழக்கம் போலவே கண்களை மூடி இன்னும் தியானிக்கும் கடவுளுக்கு எப்போதுதான் இளைத்தவன் பாடு தென்படக்கூடும் என உரத்துக் கேட்கிறது எழுதப்படாத எனதூர்த் தலபுராண வரலாறு.*

"கருவறைக்குள்
ஒளிந்திருக்கும் தெய்வம்
எப்போதும் போலவே
வெளிவருவதாய்த் திட்டம் இல்லை
இப்போதும்.
எழுதப்படாமலே போனது
எனதூர்த் தலபுராணம்.""

*நிலம் தன்னை உயிர்பிக்க மேனியில் முளைத்திடும் மரங்களின் பசுமையை நீட்டித்து விடுகிறது. வானத்தின் கருணை தலைநீட்டாத போதும் மேகத்தின் பார்வை நிலத்தை கவனிக்காது போயினும் வேர்களை நீட்டி வெறுமையை புறந்தள்ளும் செடிகளின் உயிர்த்தல் இயற்கையின் தனிச்சிறப்பான பின் உழவனின் மனதிலும் இறுகப்பற்றி இருக்கும் ஈரத்தை எடுத்துக்கொள்ளும் நிலமே உயிர்களின் இசையை மீட்டெடுகிறது. தன்னை உயிர்பிக்கும் நிலத்தில் இருந்தே தனக்கான சொற்களை ஏற்றுக்கொண்ட கவிஞரின் சிந்தனைகளிலும் மண்ணும் மண்ணைச் சார்ந்த மக்களின் பாடுகளுமே பூத்து நிற்கின்றன.*

*தன்னிடமிருந்து நிலம் பறிக்கப்பட்ட நாளில் மிச்சமிருந்த நம்பிக்கையை இழந்துவிட்டவனுக்கு யாசிப்பதில் மனமில்லை. நிலத்தைக் கடவுளாக்கி தன்னைத் தந்து உயிர்ப்பித்தவனுக்கு பறிபோனது நிலம் மட்டுமல்ல கொஞ்சம் மிச்சம் இருக்கும் நிலத்தின் மீதான கருணையுமே. ஆயினும் மேன்மக்களாகவே இருந்தவனிடத்தில் இன்னும் மிச்சம் இருக்கிறது அன்பின் ஒளி. இரக்கமற்றவனையும் தன்னை துரத்தி விட்டவனையும் கருணையால் பார்த்திட சூழலையும் நேசிக்கும் ஒருவனால் மட்டுமே முடிகிறது. நிலத்தை நேசித்து வாழும் பறவைகளின் அசைவுகளுக்குள் மனதை ஒட்டவைத்துக் கொண்டு*

தனிமைப் பொழுதுகளை தாவிப் பறந்திடும் கவிதை வானத்தில் வழிநடத்தும் மூதாதையர்களது கால் தடங்களையும் தேடிப்போகிறது கவிஞரின் சொற்கள்.

"வலிக்க வலிக்க
சாவினைத் தந்தபோதும்
பசி நிரப்பிய அவளது கண்களில்
அன்பின் ஒளிதான் கசிந்தது"

அகவெளியில் மருண்டு கிடக்கும் மனதின் ஆற்றாமைகளை தன்னை நீட்டி வாங்கிக்கொண்டு இளைப்பாற விடும் சொற்களுக்கு தாயின் தாலாட்டைப் போல், தென்றலின் தீண்டலைப் போல், பால் பொழியும் நிலவின் குளிர்ச்சியை போல், பொக்கை வாயால் புன்னகைக்கும் மழலையைப் போல பெருமனது வாய்த்துவிடுகிறது. நின்று நிதானித்து வினவிப்போகாத மனித மனங்கள் பெருகிவிட்ட விரைவுச் சூழலில் அவரவர் வலிகளை ஆற்றிடும் வல்லமை சொற்களுக்கு உண்டு என ஆறுதல் கூறுகிறது பின்வரும் வரிகள்.

"தனித்திருந்த பாடுகளை
அணைத்துக்கொண்டு
இளைப்பாற இடம் கொடுத்தன
பால்நிறத் தாள்கள்
மடியில் கிடத்தி
நீவிக்கொடுத்த ஆத்தாளாய்
ஒத்தடம் கொடுத்து
சொற்கோடுகளை வரையவிட்டு
வேடிக்கை பார்க்கின்றன
அச்சேறியய பழுப்புத் தாள்கள்
குவிந்து கிடக்கும்
ஒத்தடச் சொற்களால்
தணிந்து போகின்றன வலிகள்."

தூண்டிலில் சிக்கிக்கொண்ட மண்புழுவைப் போலவே ஆசைகளில் சிக்கிக்கொண்டு தன்னைத்தானே மாட்டிக்கொள்ளும் மனிதனின் வாழ்வு கரையில் துடிக்கும் மீனின் பாட்டை ஒத்திருக்கிறது. முட்டிமோதி உயிர்மூச்சைத் தேடும் வாழ்வின் மீதான தீராத ஏக்கமும் மனிதனை ஓட வைக்கிறது, துடிக்க வைக்கிறது, இயங்க வைக்கிறது. ஆசைப் புழுக்களின் அசைவுகள் இல்லை என்றால் மனிதனும் மாண்டு போன மீனின் மனநிலைக்கு மாறி விடுவான்.

"நீரிலே நீந்தி நீந்தித் திரிந்து
ஈர வாழ்வில் துடிப்பசைத்து
மிதந்த மீன்கள்
கரை மணலில் புரண்டு புரண்டு
நிலத்தைப் பூசிக்கொண்டு
மீத வாழ்வின் பேறு பெற்று
வாய் திறந்து மாண்டு போயின
உயிர்க்கொலைப் பழியிலிருந்து
தப்பிப் பிழைத்த நினைப்பில்
தக்கையில் தொங்கிக் கிடந்தது
மண்புழு கோர்த்த தூண்டில் முள்."

வாசிக்க மறந்து நேசிக்க மறந்து இனத்தின் பெயரால் காவு கொடுக்கப்பட்டு இனத்தாலேயே காட்டிக்கொடுக்கப்பட்டு மொழியின் வலிமையை பறைசாற்றாமல் மௌனத்தின் மீது மக்களுக்குக் கல்லறையில் எழுப்பி விட்ட இனத்தின் மிச்சத்தையும் கொன்றுவிட்ட ஆதிக்கத்தை என்ன செய்து அடக்கிவிட முடியும்? இனத்தின் பசியும் நிலத்தின் வலியும் நிரம்பி வழியும் பெருந்தாகத்தில் பாலச்சந்திரனின் கண்களைப் போல காத்திருக்கும் எல்லோரது விழிகளும் மூடித்தானே கிடந்தன. பசித்த கண்களை அப்படியே கல்லறைக்கு அனுப்பிவிட்ட மனப்பாங்கை கேள்வி என சாட்டை வீசுகிறது பாலச்சந்திரனின் கண்கள்.

மனிதக் காலடிகள் படாத பூமியின் எத்தனையோ நிலங்கள் இன்னும் இயற்கையைச் சுமந்தபடி உலாவிக்




கொண்டிருக்கின்றன. ஆணவமும் பொறாமையும் வன்முறையின் வடிவமும் பழிவாங்குதலின் வெறியும் விளைந்து கிடக்கும் மனிதனின் கால் தடங்கள் நிலத்தை முட்டுகையில் அசைந்துகொண்டது இயற்கை. இயற்கையின் மேனி நரம்புகளை அதிரடியாக அறுத்து எறிந்துவிட்டு இசையைத் தேடிய பயணத்தில் இளைப்பாறத் திணறும் மனிதனை நிலமங்கை எண்ணி எண்ணி வருந்துகிறாள்.

பெருநகரத்தின் வியப்புக்குள் தனக்கான வாழ்வை மீட்க முடியாத கண்ணகியின் அவலத்தை வார்த்தைகளின் வலிசுமந்து விடுவதில்லை. கணவருடன் நடத்திடாத இல்லறத்தை எண்ணி தாலாட்டு கேட்காத மனத்தொட்டிலுக்குள் தன்னையே ஆட்டிக்கொண்டவளுக்கு அணையாத தீ எழுந்தபின் எதைக்கொண்டும் ஆற்ற முடியவில்லை அவளது நெருப்பை என்பதை 'காலத்தடங்களின் கங்குகள்' இன்னும் சுமந்த அலைகின்றன என முடியும் கவிஞரின் எண்ணத்தில் மேடை போடுகிறது பிறரின் மீதான பேரன்பு.

மனிதனை நேராக்கி வாழ்ந்திடவும் வளர்த்திடவும் விதைகள் தூவிய வனத்தின் அடிமடியில் கை வைக்கும் பேராசை வளர்ந்த பின்னே இயற்கையும் செழிப்பும் பசுமையும் பண்பாடுகளும் காணாமல் போய்விடுகின்றன. தன் தலையில் தானே மணலை அல்ல, சேற்றை வாரி இறைத்துக்கொண்ட மனிதனின் கொடுமைக்கு இயற்கையும் வனமுமே முற்றுப்புள்ளி வைக்கத் துவங்கிவிட்டன. ஆயினும் தவறைத் திருத்திட தன் மகனைக் காவு கொண்ட இயற்கைக்குள்ளும் முளைத்து விடுகிறது தாய்மையின் பேரன்பு என்பதையே "பித்துப் பிடித்து அலையும் வனத்தாய்ச்சி" கவிதை உரக்கச் சொல்கிறது.

> வாழ்தல் என்பதன் அர்த்தம் என்ன?
> கனவுகளை ஈடேற்றலா?
> காலத்தின் நகர்தலா?
> பிள்ளைகள் வளர்ச்சியா?
> பெருஞ்செல்வம் ஈட்டலா?
> திட்டமிடுதலின் தேவைகளில்
> நொடிக்கொருதரம் திசை மாறும் மனப்
> பறவையின் வாழ்க்கை
> காலத்தில் கரைதல் அன்றி வேறென்ன?

காதலைச் சொல்லும் சொற்களிலும் மண்ணில் புரண்டு எழுந்து ஒட்டிக்கொண்ட புழுதியின் வாசம் நிரம்பிவிடுகிறது. இயற்கையின் மீதான நேசம் உயிர்களின் மீதான பாசமுமே காதலென மலர்ந்து சொற்களுக்குள் சுகராகம் மீட்டிக்கொள்கின்றன. பூக்களும் பூக்கள் நிமித்தமும் மழையும் மழை நிமித்தமும் நினைவுத்த தடங்களில் அலையென மோதிக்கொண்டிருக்கும் காதலை மீள் உருவாக்கம் செய்துவிடுகின்றன கவிஞரின் காதல் சொற்கள்.

உழவனை வணங்காத வாழ்வை உயிர் என செப்புதல் கூடாது என்ற வள்ளுவனின் வாக்கியம் வேகமான அவசர யுகத்தில் இன்றைக்கு யாருக்கும் நினைவில் வருவதில்லை. உயிர்ச்சாமிகளென உலவும் உழுகுடிப் பாதங்களை மதிக்காதவர்கள் ஒருபோதும் நிம்மதியடையப் போவதில்லை. காலச்சக்கரத்தின் சுழற்சிச் சமநிலை சரியாகும் போது செம்பாதங்களை வெண்பாதங்களின் கைகள் தொழும் என்பதை விளக்கும் கவிஞரின் உழைப்பு உழைப்பின் உயிரோட்டத்தை அறிவுறுத்திச் செல்கிறது

> "நிலத்தில் இந்தப் பாதங்கள்
> நாளை இறங்கவும் மறுக்கும்போது
> வெண் பாதங்களின் கைகளும் தொழும்"

என்று முடிகிறது.

கவிதைத் தொகுப்பின் மொத்த வரிகளையும் உள்ளடக்கி ஆகச்சிறந்த கவிதை என ஓடிக்கிடக்கும் பேரன்பை இக்கவிதை முழுவதும் பரப்பி நிற்கிறது.

"சொல்லளந்து போட்டவனுக்கும்
நெல்லளந்து போடுறது தானப்பா
சம்சாரிக வாழ்க்க"

*என்ற உலகத்திற்கான பெருங்கருணையை விதைத்து நிற்கும் பெண்ணின் மனசுதான் நூல் முழுக்க அலை பாய்கிறது.*

*உயிரின் அடிப்படை வாழ்வை நாசமாக்கி உயர் குடும்பத்தை உலாவ விடும் அதிகாரத்தின் கரங்கள் இன்னும் நீளுமானால் உணவுக்கும் உடைக்கும் நீருக்கும் காற்றுக்கும் தேடியலைந்தே செத்துப்போகும் உலகம் என்பதை இக்கவிதையின் வழி அறச்சீற்றமென சாபமிடுகிறது கவிஞரின் ஆற்றாமை.*

"வயலைப் பாழ்படுத்தி
பயிர்களைச் சாகடித்துதான்
விளக்கெரிய வேண்டுமெனில்
வயிறு எரிந்து சாபமிடும்
உழவர்கள் தூற்றிய மண்ணில்
எல்லாம் எரிந்து சாம்பலாகி
நாசமாய்ப் போகட்டும்"

*அன்பில்லாத வாழ்வும் புரிதல் இல்லாத இல்லறமும் நம்பிக்கை துறந்த நட்பும் எப்போதும் இழப்புகளையே பிரசவிக்கின்றன*

"உதடுகள் குவித்துப் பருகிய
காதலற்ற முத்தங்களால்
கசங்கிக் கிடக்கின்றன
எச்சில் கோப்பைகள்"

*உழவின் வரலாற்றை உழவனின் ஓயாத உழைப்பை வியர்வைத்துளிகளின் விளைச்சலை கலப்பையில் கைப்பிடித்த காய்ப்புகளுடனும் கழனியில் வேரூன்றிப்போன கால்களுடனும் உணவை விளைவிக்கிறது நிலத்தின் பொறுமை என்பதை ஒளிக்காட்டி என இறைத்துச் செல்கிறது இந்த வரிகள்.*

"கிழக்கத்தி மூலையில்
ஒளித்துகள்களை
விதையாய்ப் பாவிக்கொண்டு
வெளிர் வானத்தில் நடந்துவரும்
சூரிய மேனியின் மினுப்பில்
வெளிச்சப் பூச்சை அப்பிக்கொண்டு
ஒயில் முகம் காட்டுகிறது
நஞ்சை நிலம்"

*மனிதர்களின் மீதான நிலத்தின் தாய்மையை விதைத்துச் செல்லும் இந்த வரிகளே போதும் மனிதர்களை எல்லா துன்பத்திலிருந்தும் விட்டு விடுதலை ஆக்கிட.*

"உழவு நிலத்தின்
ஈரப்பாலை உறிஞ்சிக் கொடுத்து
முளைகட்டிய
விதைச்சொற்கள் வெண்முகம் காட்டிச்
சிரித்தன
வாழ்தலின் பேரின்பத்தை
மணக்க மணக்கப் பாடியது
பூப்பெய்திய காடு"

*நூலின் அட்டைப்பட ஓவியம் வெகு அருமை. மிகச் சிறப்பானதொரு கட்டமைப்பில் ஓவியம் நூலின் முழுப்பாட்டையும் எடுத்துக் கூறுகிறது. அதேபோல் உள்பக்கங்களில் உள்ள கோட்டோவியங்களும் கவிஞரின் பாடுபொருட்களைப் பறைசாற்றி நிற்கின்றன.*

உயிர்த்தலைச் சுமக்கும் நிலம் கோதிய
சொற்கள்
நெய் கசிந்த மாடக்குழிகள்
மண் மீட்டிய வேர்களின் இசை
பாலச்சந்திரனின் கண்கள்
இருட்டில் பெய்த சிறு மழை
காலத்தடங்களின் கங்குகள்
மன்றாட அலையும் வனத்தாய்ச்சி
தன்னைத் தொலைத்த மனப்பறவை



பழுப்பேறிய நாட்குறிப்பின் நினைவுகள்
உழுகுடிப் பாதங்களின் கொப்புளங்கள்
கசப்பாய் முளைத்த கனவுகள்
உக்கிப் போனது நிலம்
சம்சாரிகளாய்ப் பிறந்ததன் வலி சாவிலும்
கொடிது
நீர் முலைத்தாய்ச்சிகள்
வழக்குச் சொல்லலை
பெரு முதலைகளின் வைப்பாள்கள்
வானம் பாவிய துளி விதைகள்
துரோகப் பருந்து
ஊழிப் பாம்பு
கடல் தாய்ச்சி
முளைகட்டிய விதைச்சொற்கள்
களவு பூ

*என்ற சொற் சித்திரங்களில் பூத்திருக்கும் இந்த கிராமத்து பசும்பூ நம் நினைவுகளில் எப்போதும் ஈரத்தையும் மண்ணின் பிசுபிசுப்பையும் ஒட்ட வைத்துக்கொண்டே இருக்கின்றது.*

*தனது படைப்புகளை உருவாக்கும் அழகியலிலும் அரசியலிலும் மிகத்தெளிவான சொற்களையும் பொருத்தமான கருத்துக்களையும் பிணைத்திடும் கவிஞரின் பாங்கில் கலைமீதான பெருமதிப்பும் பேரின்பமும் விளைந்து நிற்கிறது. தமிழ்ச் சமூகம் மறந்துபோன கால வெள்ளத்தின் ஓட்டத்தில் மறைந்துபோன வேளாண் மரபை பற்றிய தரவுகளையும் பண்பாட்டு அசைவுகளையும் மீளுருவாக்கம் செய்து இலக்கியத்தின்வழி தமிழ் அடையாளத்தை மீட்டெடுக்கும் போராளியாக தனது கடுமையான உழைப்பாலும் தொடர்ச்சியான செயல்பாடுகளாலும் முன்னிற்பவரின் எழுத்தும் அவற்றையே எதிரொலிக்கின்றன. உழுகுடிக்குள் நம்மை உட்புகுத்தி வயல் பாத்திக்குள் நம்மை உழைக்க வைத்து சொற்கதிர்களால் மனப்பசிக்கு உணவிட்டு நகரச் சந்துகளுக்குள் கிராமத்தின் புழுதியை பரப்பி இருக்கிறது நிலம் உருவாக்கிய சொற்களின் தொகுப்பு.*

*நிலத்தில் முளைத்த சொற்கள், கவிதைத் தொகுப்பு, ஏர் மகராசன், முதல் பதிப்பு மே 2024, பக்கங்கள் 112, விலை ரூபாய் 100, வெளியீடு யாப்பு வெளியீடு சென்னை தொடர்புக்கு 94436 76082.*

ilayavansiva@gmail.com ■

கவிதை

**அருணோதயா**

# இது நியதி

சூரியனின் ஒளிக்கீறலைப் போல்
என் காதல்
ஓராயிரம் முறை விரிந்து கிடந்தது
மண்ணை மலரச் செய்யும்
மழைநீர் போல்
ஒவ்வொரு கலவியிலும்
பூத்துக் குலுங்கியது
பால்வெளி அண்டத்தின்
பிரிதொரு பாகம் போல்
சொப்பனத்தில் புணர்ந்த உருவம்
இவை யாவும் ஒருவருடன் அல்ல
ஆனாலும் ஒற்றைக்கொம்பில்
நிற்கும் இவ்வாழ்வு
ஒருவனுக்கு ஒருத்தி என்ற
சருகின் சாராம்சத்தில்...

arunodhayav@gmail.com ■

எழுத்து 

- தமிழிலக்கிய அமைப்பு




# விளம்பரம்

## "எழுத்து" தமிழிலக்கிய அமைப்பு

**திருமதி சௌந்தரா கைலாசம் இலக்கியப் பரிசு**
**2024ம் ஆண்டுக்கான**
**ரூ.2,00,000/- (ரூபாய் இரண்டு இலட்சம்) பரிசுக்கான**
**நாவல் போட்டி!**

சிறந்த கதையம்சம் நிறைந்த நிகழ்கால சமூகப் பிரச்சனைகளைப் பிரதிபலிக்கிற நவீனத்துவம் நிறைந்த இதுவரை வெளிவராத புதிய படைப்புகள் வரவேற்கப்படுகின்றன. கணினி அச்சிட்டு "ஸ்பைரல் பைண்டிங்" செய்யப்பட்டு, 1x8 டெமி அச்சில் 200 பக்கம் முதல் 250 பக்கங்கள் வரையிலான பிரதிகள் மூன்று அனுப்ப வேண்டும்.

போட்டி தொடர்பான பரிந்துரைகள், கடிதங்கள் ஏற்கப்பட மாட்டாது. நடுவர் குழு மற்றும் அறங்காவலர் குழுவின் முடிவே இறுதியானது.

படைப்புகள் வந்து சேர வேண்டிய கடைசி நாள் : ஏப்ரல் 30, 2025

<u>நாவல்கள் அனுப்ப வேண்டிய முகவரி</u>

"எழுத்து" தமிழிலக்கிய அமைப்பு,
3C – "எல்டோராடோ"
112-A, நுங்கம்பாக்கம் நெடுஞ்சாலை,
சென்னை – 600 034.
தொலைபேசி : 044 – 28270931
செல் : 9486361884, 9841440410

சிறுகதை

முத்துஜெயா

# அவன் அவள் அது




டது ஓரத்து ஜன்னல் கம்பிகளைத் தாண்டிய வெளிச்சம் கண்களை வந்ததும் நடு இரவில் ஆட்கொண்ட தூக்கம் மெதுவாக விலகியது. குளிர் அடங்கிய சாக்லேட் நிறத்தில் தெரிந்த அறையை பார்த்துக்கொண்டவள் தலையணைக்கு அடியில் இருந்த செல்லை எடுத்து மணியை பார்த்தாள். இன்னும் கூட தூங்கலாம் என்றாலும் அப்பாவின் குரலில் இருந்த நிவி என்ற வார்த்தை மந்திரத்தைப் போல கதவுவரை வந்துபோனது. எப்போதும் அந்தக் குரல் மூடிய கதவைத் தாண்ட முடியாமல் எறும்பு போல் ஊரும்.

இரவு உடையை கீழாக இழுத்துக்கொண்டு கழுத்து இடைவெளியைச் சரிசெய்து கொண்டு முகம் கழுவும் கண்ணாடி முன்பாக பார்த்துக்கொண்டவளின் இடது கன்னத்தின் கீழிருந்த மச்சம் அதிகாலை நிலவு போல் மங்கித் தெரிந்தது.

இன்னொரு முறை நிவி என்ற சொல்லுக்கு பதிலாக 'வர்றேன்ப்பா...' என்றாள். அடுத்த ஒருமணி நேரத்திற்கான இடைவெளியைச் சரிசெய்யும் வார்த்தை அது. திரும்பவும் கட்டிலில் அமர்ந்து மொபைலின் கடவு எண்ணை அழுத்தி ஒளிரவிட்டவள் குறுஞ்செய்தி பிரிவில் நுழைந்து ஆனந்த் கடைசியாக அனுப்பிய செய்திக்குப்பின் ஏதாவது தெரிகிறதா என்று பார்த்தாள்.

எதுவுமில்லை என்ற விரக்தியில்லாமல் காலை வணக்கத்தை அனுப்பி வைத்தாள். ஒற்றைக் கோடோடு நின்றுபோனது.

இதுவரை பரிச்சயம் இல்லாத இடம் என்றோ, யாரை எப்படி எதிர்கொள்வது என்ற பயமோ துளியும் இல்லை அவளிடம். 'நாளைக்கு காலையில பத்துமணிக்கு வந்துரு.. வழக்கம் போல உனக்கு முன்னாடி வந்துருவேன்.' என்ற வாசகம்தான் அவனுக்கு திரும்பத்திரும்பச் சொல்லப்பட்டது.

கதவைத் திறந்து ஹாலுக்கு வந்தவள் கிச்சனைப் பார்த்தாள். வேலைக்குத்தான் போகிறாள் என்று சூடு ஆறாத மதிய உணவு தயாராக இருந்தது. அம்மா இருந்தால் அந்த வேலையை இவள்தான் செய்ய வேண்டும். நேரம் மட்டுமல்ல வேலையைக்கூட விசேஷ நாட்களில் கட்டும் பட்டுபுடவையின் மடிப்பு போல நேர்த்தியாகச் செய்வாள்.

சமீப காலமாக அவள் நினைவு கடிகாரத்தின் பெண்டுலம் போல அப்பாவை எதிரில் நிறுத்தி ஆட்டியது. அப்பா செய்யும் ஒவ்வொன்றும் அம்மா இருந்தால் எப்படிச் செய்திருப்பாள் என்ற ஒப்பீட்டு நினைவுகளைத் துரத்தவே முடியவில்லை. இத்தனைக்கும் அது வளர்ப்பு நாயைப் போல கால்களைச் சுற்றி காது கொடுத்து கேட்கும் தறுவாயில் மேலேறி ஈரம் கொள்கிறது.

இன்றைக்கு உணவு வேண்டாம் என்று அம்மாவிடம் சொன்னால் குறைந்த பட்சம் நூறு வார்த்தைகள் வரும். அதில் சில அதிகாரமாகவும் தவிர்க்க முடியாததாகவும் இருக்கும். பேசாமல் எடுத்துக்கொண்டு போய் எங்காவது கொட்டிவிட்டு திரும்பக் கொண்டுவந்தால் என்ன என்ற சிந்தனைதான் வென்றுவிடும். ஆனால் அப்பா அப்படியில்லை. சரி என்ற ஒற்றை வார்த்தையை வைத்து நூறு வார்த்தைகளைக் கொன்றுவிடுவார். இரண்டு நாட்களுக்கு முன்னால் தூக்கம் கலைந்த அதிகாலை வேளையில் காபி குடிக்கும் ஆசை வந்து கிண்ணத்தில் பாலூற்றி அடுப்பில் வைத்தவள் அது தீய்ந்துபோகும் வாசனை வரும்வரை மொபைல் போனில்தான் இருந்தாள். காபியைக் கலக்கி வந்து கையில் தந்துவிட்டு 'என்கிட்டே கேளும்மா... நான் போட்டு தாரேன்..' என்ற வார்த்தை வந்து தாடை தூக்கிப் பார்த்தவளுக்கு மெதுவாகத்தான் எல்லாம் புரிந்தது.

இதுவே அம்மாவாக இருந்தால் என்னென்ன நடக்கும் என்ற நினைவுகள் மங்கிய சுவரில் காட்சிகளாக ஓடி மறைந்துபோனது.

மகளுக்கும் மணாளனுக்கும் நடுவில் குட்டையாக இருந்த அம்மாவின் புகைப்படத்தை துடைத்து திரும்ப மாட்டிய அன்று வேறு எதிலும் அவள் நகரவேயில்லை.

அப்பாவின் ஸ்கூட்டரை மாற்ற வேண்டும் என்ற எந்த நிர்பந்தமும் இல்லையென்றாலும் தூரத்தைக் கடந்து அவர் அருகில் போகும் வாய்ப்பாகக் கருதி என்ன வாங்கலாம் என்றபோது 'நீயே முடிவு பண்ணுமா... எனக்கு எதுனாலும் சரி தான்' என்றார். ஒருநாளின் முழு இரவை தூங்காமல் தின்று சேரித்து திரும்பவும் கேட்டாள், 'எல்லாமே நான்தானப்பா.. நீங்க முடிவு பண்ணுங்க' என்றபோதும் மிகச்சரியான வார்த்தைகளைக் கோர்த்து 'நீ என்ன சின்ன பொண்ணாமா... இனி நீ தான.. எல்லாம் பார்க்கணும்' என்ற வார்த்தைகளை வழக்கமாக இடது கையால் உதறுவதைத் தவிர நிவியால் ஒன்றும் செய்ய முடியவில்லை.

அம்மா இறந்த இந்த மூன்று வருடங்களில்தான் அவரின் செயல்பாடுகளில் இந்த மாற்றம். ஒவ்வொன்றுக்கும் அப்பாவை தேடும் அம்மாவைப் பார்க்கும்போது எரிச்சல்தான் வரும். ஆனால் அப்பாவின் முடிவு இல்லாமல் எதுவுமே நடந்தது இல்லை. பள்ளி நாட்களில் மாலை வேளைகளில் சில நேரம் கண்ணில் நீர்பூத்திருக்கும் அம்மாவிடம் அப்பாவைப் பற்றிய எந்தக் குற்றசாட்டும் வந்ததில்லை. சப்தம் இல்லாமல் இரவு உணவு முடிந்து தூங்கும் இடைவெளியில் அப்பாவின் கையை கவனித்த நாட்களில் அது அம்மாவின் உள்ளங்கையில் கிடக்கும்.

ஒருவேளை கடைசி உறவு தன்னை தவிர்த்துவிடுமோ என்று நினைக்கிறரோ என்று தோன்றும். ஆனால் மௌனம் உடைக்கும் பொருளில் ஒன்று என்று அவருக்கு எப்படிப் புரிய வைப்பது என்று யோசிப்பாள்.

உடுத்திய ஆடை, அலுவலகப் பை, திசைக்கு ஒன்றாக கிடக்கும் செருப்பு என்ற எதற்கும் திரும்பப் பேசாத அப்பாவை வேறென்ன செய்வது. உணவை மட்டுமல்லாமல் அழுத்தமான

உருண்டையை விழுங்கிவிட்டு வெளியேறும் நிவிக்கு வீடு அலங்காரப் பொருள் அளவுக்குக்கூட பிடிக்கவில்லை.

மூடிக்கிடந்த மதிய உணவை எடுக்காமல் தயாராக மேசையின் மீதிருந்த வண்டி சாவியை எடுத்துக்கொண்டு வெளியேறினாள். படிகளில் இறங்கும்போதுதான் கதவை மூடவில்லை என்ற ஞாபகம் வந்தாலும் அதைப்பற்றி கேட்கும் குரல் இல்லை என்பதால் பழைய துணியை வைத்து சீட்டை சுத்தம் செய்தவள் மீண்டும் மொபைலை பார்த்தாள். காலை வணக்கம் இரண்டு பச்சை குறிக்கு மேல் இருந்தது. உதடு தாண்டத் துடித்த செம்பருத்தி பூவிதழ் புன்னகையை உதடு தாண்டாமல் வைத்துக்கொண்டு வாகனத்தைப் பேச வைத்தாள்.

தலைமுடியை விரல்களால் சுருட்டி கடைசியாகக் கற்றையாகப் பிடுங்கப்போகும் அளவிற்கு கோபம் வந்தாலும் அதை தாண்டி நிவியை அவனால் ஒன்றும் செய்ய முடியாது.

பேசத்துவங்கும் குழந்தையைப் போல் நடேசன் பார்க்கில் ஒருமுறை சொல்லிய ஒன்றையே திரும்பத் திரும்ப சொல்லியவளை விரல் பதியும் அளவிற்கு கன்னத்தில் அடித்துவிட்டு வண்டியை எடுத்துகொண்டு போனவனை மறுநாள் அலுவலக வாசலில் டைரி மில்க் சாக்லேட் தந்து 'ஏன்டா லேட்..' என்றாள்.

'என்னை கொஞ்ச நேரம் தூக்கிட்டு போயேன்' என்றவளின் வார்த்தையை பெசன்ட் நகர் கடற்கரையில் வைத்து கண்களால் நிராகரித்த பாவத்திற்காக மூன்று நாள் பேசாமல் இருந்தாள்.

ஏன் எதற்காக என்னவாக இருக்கிறாள் என்பதை புரிந்துகொள்ளாத குழந்தையைக் காதலிப்பதாக உணர்ந்த தருணத்தில் எல்லாம் கண்ணாடி முன்பு நின்று பார்த்துக்கொண்டவனுக்கு ஒன்றுதான் புரியும். தனக்கு மட்டும்தான் அவ்வளவு அழகாகத் தெரிகிறாளா? என்ற சந்தேகமது. ஆண் கண்கள் அருந்தும் அழகோடு திகட்டத் திகட்ட அவனை நோக்கி வரும் நிவியைப் பார்க்கும் கண்களின் ஓரத்தில் கருமையைப் பற்றிய சுழிப்பும் கூடவே வரும்.

ஒருபடி உயர்ந்த பதவியால் வந்த காதலா என்று பரீட்சித்துப் பார்த்துக்கொண்டான். சுற்றுலா நெருக்கத்தில் கொரங்கு என்று கிட்டத்தட்ட அதன் சாயலில் சொன்னவனை இன்னும் நெருங்கிப் பற்றிக்கொண்டவள் கற்றையாக முடியைப் பிடித்து 'உன்னவிட்டு தாவ மாட்டேன்' என்றாள்.

'கொஞ்சம் கூட அறிவே இல்ல உனக்கு..' என்றவனை என்ன வேண்டுமானாலும் செய்யலாம் என்றாலும் 'உனக்கு இருக்குல்ல எனக்கு எதுக்கு?' என்றாள். குளத்திலிருந்து படி ஏறியவனைத் தொடர்ந்துவரும் நீர்க்கோடு போல அவனால் நிவியை தவிர்க்க முடியவில்லை. உள்ளுக்குள் தீ வளர்த்துக்கொண்டு எதையோ விரட்டுவது போல் சுற்றிக்கொண்டிருப்பவளை வேறென்ன செய்வது.

இரண்டு கைகளையும் தலைக்கு முட்டுக் கொடுத்துக்கொண்டு முடித்து வைக்காத கணினியை அமர்த்தி வைத்துவிட்டு விட்டத்தைப் பார்த்தான். 'இப்போ என்ன அவசரம்.. யாருக்கு பயந்துகிட்டு ரிஜிஸ்டர் மேரேஜ் பண்ணும் நாம..' என்ற கேள்விகளுக்கு அவளிடம் பதில் இல்லை. 'அதல்லாம் தெரியாது, என்ன லவ் பண்ணுனேல்ல... அப்புறம் என்ன யோசனை... வேற எதாவது யோசிக்கிறயோ?' என்ற கேள்வியை அவள் கேட்ட நிமிடத்தில் இது வேறு எங்கோ போகிறது என்று மௌனமானான்.

'அம்மாவ விட்டுட்டு என்னால கல்யாணம் பண்ண முடியாது' என்ற காரணத்தை நிச்சயம் புரிந்துகொள்ளுவாள்

என்று சொல்லவில்லை என்றாலும் அற்ப காரணங்களுக்கு வழிவிட்டு ஒதுங்கிக்கொள்கிற அவள் மனநிலையை வென்றுவிடும் என்று சொல்லிப் பார்த்தான். 'நான் வேணா கூட்டிட்டு வரட்டா...' என்றாள்.

வேறு வழியில்லை. போகும் இடத்தில் ஏதாவது காரணம் கிடைத்தால் பார்க்கலாம். இல்லை என்றால் அவள் போக்கில்தான் நடக்கட்டுமே என்றபோதும் அவனால் நிவியை மட்டும் வெறுக்கவே முடியவில்லை.

அது வாழ்வின் மறக்க முடியாத ஒன்றை தூக்கிக்கொண்டு வந்துவிடும் என்ற பயமும் இருந்தது. ஒரு புன்னகையும் சின்ன வருடலும் வார்த்தைகளாக வரும் அக்கறையே போதும் என்ற காதல் காலத்தில் அன்பை மனதின் ஆழத்தில் இருந்து ஒவ்வொரு முறையும் எடுத்து வருப்பவளை என்னதான் செய்வது என்று கிளம்பினான்.

'இரு வரேன்' என்று கையைக் காட்டிவிட்டு வாகன நிறுத்தத்தைப் பார்த்துப் போனவள் மஞ்சள் புடவையில் இருந்தாள். இதே புடவையில் ஒருமுறை வீட்டிற்கு அழைத்து போனவள் மௌனமாக அமர்ந்திருந்த ஞாபகம் வந்தது அவனுக்கு. 'உன் வீடுதான' என்ற போது 'ஆமாம்.. ஆன இங்க நானா இருக்க மாட்டேன்' என்றாள். சின்ன இடைவெளியில் கூட மடியில் அமர்ந்துகொள்ளுகிறவள் அப்பாவின் கண்பார்வை மறைந்த பிறகும் கூட அப்படியேதான் இருந்தாள்.

'ஆமா.. அப்போ உங்க அப்பாவை கூப்புடு... கல்யாணத்துக்கு..' என்று நிறுத்தும் யோசனையாக சொன்னவனிடம். 'கண்டிப்பா வருவாரு... அவரு வரமுடியாதுன்னு சொன்னா கண்டிப்பா கூப்புடுவேன்..' என்றாள்.

இடது கையில் முந்தானையை ஏந்திக்கொண்டு வருபவளைப் பார்த்துவிட்டு கண்களைத் தாழ்த்திக் கொண்டவனை, 'என்ன யோசனை' என்றாள்.

'எனக்கு கொஞ்சம் டைம் வேணும்... இன்னைக்கு முடியாது..'

'எதுக்கு...'

'முடியாதுன்னா முடியாது... அவ்ளோதான்' என்றான்.

இடதுபுறமாகச் சுற்றி வந்தவள் 'ஏமாத்த பாக்குறயோ..' என்றாள்.

'அதல்லாம் இல்ல..'

'ம்ம்... வா சாப்டலாம்..' என்று கையைப் பிடித்து அழைத்துக்கொண்டு எதிரிலிருக்கும் உணவகத்தை நோக்கி நடந்தாள். நிவியின் அப்பாவின் அலைபேசி எண் இருக்கிறதா என்ற சிந்தனை ஓடிக்கொண்டிருந்தது அவனிடம்.

mk0405150@gmail.com ■



கவிதை

பாலகுமார் சுப்ரமணியன்

# சமைதல்

கல்லான பின்னும்
சிக்கிமுக்கிகளால்
உரசப்படுகிறாள் அகலிகை
பற்றி எரிகிறது
இந்திரன் காமத்தீ

hanishbala03072011@gmail.com ■

BOB WOODWARD

THE #1 INTERNATIONAL BESTSELLING AUTHOR

WAR

கட்டுரை

பாரதிராஜா

# பேரர் - பரப் வூட்வர்ட்



அமெரிக்க இதழியல் உலகில் பாப் வூட்வர்ட் ஒரு பெரும் ஆளுமை. இப்போது அவருக்கு 81 வயது ஆகிறது. இதழியலாளர்களுக்குக் கொடுக்கப்படும் விருதுகள் அனைத்தும் பெற்றவர். 1971-இல் இதழியலாளராகப் பணியைத் தொடங்கியவர், அடுத்த ஆண்டே அமெரிக்க வரலாற்றிலேயே முதல் முறையாக நிகழ்ந்த பெரும் நிலநடுக்கத்தை ஏற்படுத்தியவர். 1776 முதல் கிட்டத்தட்ட இருநூறு ஆண்டுகளாக மக்களாட்சியாக இருந்த அமெரிக்காவில், 37 அதிபர்களைக் கண்டுவிட்ட அமெரிக்காவில், அதன் அன்றைய அதிபர் நிக்ஸன் மீதே ஊழல் குற்றச்சாட்டு சுமத்தி, அதை நிறுவி, அவரை வீட்டுக்கனுப்பிய பெருமை இவரைச் சாரும். ஓர் இதழியலாளர் சாதிக்க முடிகிற ஆகப்பெரும் சாதனை இது என்று இன்றும் கருதப்படுகிறது. இதுவரை அமெரிக்க அரசியல் பற்றி 21 நூல்கள் எழுதியுள்ளார். அவை அனைத்துமே அமெரிக்க மிகை விற்பனைப் பட்டியலில் இடம் பெற்றவை. அவற்றில் 14 முதலிடத்தில் இடம் பெற்றவை. எண்ணிப் பார்க்கவே முடியாத இடங்களிலிருந்து கூட தகவல் கறக்க முடிகிற இவரைப் போன்ற ஒருவரைத்தான் உளவுத்துறையில் எடுத்துக்கொள்ள வேண்டும் என்று முன்னாள் உளவுத்துறை இயக்குநர் ஒருவரால் பாராட்டப்பட்டவர்.

ஐந்தாண்டுகள் அமெரிக்கக் கடற்படையில் பணியாற்றிய அனுபவம் அவருக்கு இந்த நூல் எழுதும் போது நிறைய உதவியிருக்கலாம். இது போர் பற்றி அவர் எழுதும் முதல் நூலும் அல்ல. இதற்கு முன்பு ஜார்ஜ் புஷ் காலத்தில் நடந்த போர் பற்றியும் விரிவாக எழுதியிருக்கிறார். புஷ்ஷோடுதான் மற்ற அதிபர் எவரை விடவும் அதிக நேரம் செலவிட்டிருக்கிறார். அவர் ஆட்சியைப் பற்றித்தான் நான்கு நூல்கள் எழுதியிருக்கிறார். இந்தக் காலத்தில் அதிபர் புஷ்ஷின் ஆட்களை இவர் திறமையாகப் பயன்படுத்தி தகவல்கள் கறந்தார் என்று ஒரு கதையும், தகவல் தருகிறோம் என்று சொல்லி புஷ்ஷின் ஆட்கள் இவருக்குத் தண்ணி காட்டி அவர்களுக்கு வேண்டியவற்றைப்

பரப்பிக்கொண்டார்கள் என்று இன்னொரு கதையும் உண்டு. ஈராக் பேரழிவு ஆயுதங்கள் வைத்திருந்தது என்று புஷ் கட்டிய கதையை இவர் கேள்வி கேட்காமல் நம்பினார் - பரப்பினார் என்பது இவர் மீது இருக்கும் கறைகளில் ஒன்று. இப்போது இதைச் சொல்வதற்கு ஒரு காரணம் இருக்கிறது. இந்த நூலிலும் பைடன் ஆட்சி பற்றிய பல தகவல்கள் இவருக்கு எளிதாகக் கிடைத்திருக்கின்றன என்பது புரிபடுகிறது. அது நமக்குப் பல கேள்விகளையும் எழுப்புகிறது. அரசியல்வாதிகளுக்கும் இதழியலாளர்களுக்கும் இடையில் நடக்கும் கொடுத்து வாங்கும் விளையாட்டின் விளைவுதான் இந்த நூலுமோ என்று சிறியதாய் ஓர் ஐயம் வருகிறது. அதற்காக இந்த நூலை முழுவதுமாய் மறுதலிக்கவும் முடியாது. அதை மீறிப் பல முக்கியமான பின்னணித் தகவல்களையும் கதைகளையும் வெளிக்கொணர்ந்து கொடுக்கும் அரும்பணியை இந்த நூல் கண்டிப்பாகச் செய்திருக்கிறது.

இந்த நூல் மூன்று முக்கியமான போர்களைப் பற்றிப் பேசுவதாகச் சொல்லப்படுகிறது. முதலாவது, ரஷ்ய-யுக்ரைன் போர். இரண்டாவது, இஸ்ரேல்-ஹமாஸ் போர். மூன்றாவதுதான் முக்கியமானது. பைடன் அதிபராகத் தொடர்வதில் இருந்த சிக்கல்களைக் கையாண்டது. அமெரிக்க அதிபரும் அவருடைய ஆட்களும் தொடர்ந்து ரஷ்ய அதிபர் புடினுடனும் யுக்ரைன் அதிபர் செலன்ஸ்கியுடனும் இஸ்ரேல் பிரதமர் நெதன்யாகுவுடனும் பேசிக்கொண்டே இருக்கிறார்கள். இன்னொரு புறம் டொனால்ட் டிரம்ப் மீண்டும் ஆட்சியைப் பிடித்துவிட வேண்டும் என்ற நோக்கத்தோடு தொடர்ந்து தலைவலி கொடுத்துக்கொண்டே இருக்கிறார். மூடிய அறைகளுக்குள் நடைபெறும் உரையாடல்கள் அனைத்தும் அப்படியே நமக்கு நேரில் பார்ப்பது போலப் படைக்கப்படுகின்றன. வெள்ளை மாளிகையின் சுவர்களில் ஒட்டியிருக்கும் ஒரு கண்ணுக்குப் புலப்படாத ஈ போல அவரைக் கற்பனை செய்துகொள்ள வேண்டும் என்கிறார்.

பைடன் பற்றிப் பல குற்றச்சாட்டுகள் வைக்கப்பட்டாலும் நூல் முழுக்கவும் அவர் மீதான நம் மரியாதை கூடும் படியான தகவல்களே நிறைந்திருக்கின்றன. அமெரிக்க கண்ட அதிபர்களிலேயே அந்தப் பொறுப்புக்குரிய முழுத்தகுதியோடும் அனுபவத்தோடும் வந்து சேர்ந்த அதிபர் இவர்தானோ என்று தோன்ற வைக்கிறது. ஒபாமா ஆட்சியில் துணை அதிபராக இருந்த போது, ஒபாமாவின் அனுபவமின்மை வெளிப்படாத அளவு பார்த்துக்கொண்ட பணி இவருடையது என்பது தொடக்கத்திலேயே சொல்லப்படுகிறது. ஒபாமா மக்கள் ஆதரவோடு பொறுப்புக்கு வந்தவர் என்றாலும், மக்களுக்கு நல்லது செய்ய வேண்டும் என்ற நல்லெண்ணத்தோடே வந்தவர் என்றே வைத்துக்கொண்டாலும் அது மட்டும் இத்தகைய பொறுப்புமிக்க பணியைச் சிறப்பாகச் செய்யப் போதாது. அனுபவம் இருக்க வேண்டும். அமெரிக்க அதிபர் என்பவர் அமெரிக்காவை ஆள்பவர் என்கிற அளவுக்குத்தான் ஒபாமாவின் அனுபவம் அப்போதைக்கு இருந்திருக்கிறது. உலகம் முழுக்கவும் நடந்துகொண்டிருக்கும் பல பிரச்சனைகளைக் கையாள வேண்டும். உலகத்துக்கே பெரும் தலைவலியாக இருக்கும் பலரோடு உறவாட வேண்டும். அந்த முழுப் பொறுப்பையும் பைடனிடம்தான் ஒபாமா விட்டுவிட்டாராம். அந்த அனுபவத்தையும் பயன்படுத்தி பைடன் ஆட்சி செய்தார் என்கிறார். இதுபோன்ற பொறுப்புகளுக்கு

தேவையான அளவுக்கு அறிவு இல்லாமல் வருவதே அனுமதிக்கப்படக்கூடாது. அதற்கு வாய்ப்பில்லை என்றால் கற்றுக்கொள்ள வேண்டும் என்கிற ஆசையாவது இருக்க வேண்டும். மக்கள் தேர்ந்தெடுக்கும் அதிபர்கள் அனைவரும் அப்படியானவர்களாகவா இருக்கிறார்கள்? இதற்கு முன்பு டிரம்ப் ஆட்சி பற்றி எழுதிய 'அச்சம்: வெள்ளை மாளிகையில் டிரம்ப்' (Fear: Trump in White House) என்ற நூலில் அவருக்கு ஒரு சிறுவனுக்கு இருக்கும் அறிவு கூடக் கிடையாது என்று எழுதியிருப்பார். அது நினைவுக்கு வருகிறது. ஒவ்வொரு பெரும் உரையாடலிலும் பைடனின் இடத்தில் டிரம்ப் இருந்தால் எப்படியிருக்கும் என்று எண்ணிப் பார்ப்பதைத் தவிர்க்க முடியவில்லை.

இதற்கு முந்தைய இரண்டு உலகப்போர்களின் போது இருந்திராத சூழல் இப்போது. இரு வேறு போர்களில் எந்தப் போர் மூன்றாம் உலகப் போரில் போய் நிற்கும் என்று கணிக்க முடியாத அளவுக்கு இணையாக இரண்டு போர்களிலும் நிகழ்வுகள் நடந்தேறுகின்றன. மூன்றாம் உலகப் போர் மூண்டுவிடக் கூடாது என்பது போலவே இன்னொரு அழுத்தமும் புதிதாக இருக்கிறது. நடைபெறும் போர்களில் ஒன்று அணு ஆயுதப் போராக மாறிவிடாமல் பார்த்துக்கொள்ள வேண்டியதிருக்கிறது. நேரடியாக - அலுவல்வழி உரையாடல்கள் ஒருபுறம் நடக்கின்றன. பின்னணியிலும் பல உரையாடல்கள் நடக்கின்றன. "நாங்கள் இதைச் செய்ய மாட்டோம். நீங்கள் அதைச் செய்யக்கூடாது" என்பது போன்ற நிபந்தனைகளோடு நிகழ்த்தப்படும் உரையாடல்கள்.

பெரும்பாலும் பைடனைச் சுற்றியே வரும் கதை, மெதுவாக கமலா ஹாரிஸை உள்ளே கொண்டுவருகிறது. பைடன் எப்படி ஹாரிஸை இந்த




உரையாடல்களுக்குள் கொண்டுவந்தார் என்றும் சொல்லப்படுகிறது. பைடன் சில நேரங்களில் மேடையில் தடுமாறுவதும் வேறு சில நேரங்களில் மிகத் தெளிவாகப் பேசி வியப்பூட்டுவதும் வெளியில் இருப்பவர்கள் கண்டவை. ஆனால் அவரோடு நாள்தோறும் பின்னணியில் பணியாற்றியவர்கள் வியப்போடு பகிர்ந்த ஒரு தகவல் - அவர் தனிப்பட்ட முறையில் பேசும் போது ஒருமுறை கூட வாய் குழறியதோ தடுமாறியதோ கிடையாது. ஒவ்வொரு சூழலிலும் அவர் எடுத்த முடிவுகளும் கொடுத்த கட்டளைகளும் தெள்ளத்தெளிவாக இருந்தனவாம்.

டிரம்ப் மீது கடுமையான குற்றச்சாட்டுகள் வைக்கிறார். பொறுப்பிலிருந்து விலகிய பின்பும் தொடர்ந்து புடினுடன் தொடர்பிலேயே இருந்து வந்ததாகச் சொல்கிறார். ஏழு முறை தனிப்பட்ட

முறையில் புடினோடு உரையாடியிருக்கிறாராம். பெருந்தொற்றின் உச்சத்தில் அமெரிக்காவிலேயே தட்டுப்பாடாக இருந்த பரிசோதனைக் கருவிகளைப் பாதுகாப்பாக புடினுக்கு அனுப்பி அவரின் அன்பைப் பெற்றார் என்கிற தகவல் நமக்கு நம்பவே முடியாததாக இருக்கிறது. டிரம்ப் எது செய்தாலும் சரி என்கிற கூட்டத்தைப் போலவே டிரம்ப் எது செய்ததாகச் சொன்னாலும் நம்பக் கூடிய - அதிர்ச்சியடையாத ஒரு கூட்டமும் இருக்கத்தானே செய்கிறது! அதற்கு புடின் சொன்ன பதில் என்ன தெரியுமா? “என் மீது இவ்வளவு அன்பு கொண்டு இதை எனக்கு அனுப்பிவைத்த கதையை நீ வெளியில் சொன்னால், எனக்கொன்றும் பிரச்சனையில்லை. உனக்குத்தான் உன் நாட்டில் பிரச்சனை ஆகும்” என்றாராம். அதற்கெல்லாம் கவலைப்படுகிற ஆளா தலைவன்!

அமெரிக்க வரலாற்றிலேயே முதல் முறையாக ரஷ்ய அதிபர் ஒருவரை வழிபடும் அமெரிக்க அதிபர் அமைந்திருப்பது நமக்குப் பல கேள்விகளை எழுப்புகிறது. சோவியத் ரஷ்யாவை உடைத்துப் போட்டதன் மூலம் பனிப்போரில் அமெரிக்கா வென்றுவிட்டது - எல்லாம் முடிந்துவிட்டது என்று எண்ணுவது தவறோ என்று படுகிறது. புடின், ‘அதற்கான பதிலடியை என் வாழ்நாளில் கொடுக்காமல் போக மாட்டேன்’ என்று சூளுரைத்துச் செயல்படுவது போலத் தெரிகிறது. யுக்ரைன் ரஷ்யாவின் ஒரு பகுதி, யுக்ரைன் இல்லாத ரஷ்யா முழுமையான ரஷ்யாவே அல்ல என்று அவர் மனமார நம்புகிறார். அதை வலுப்படுத்தும் வகையில் நிறைய வாசித்திருக்கிறார். கோவிட் காலத்தில் கிடைத்த நேரத்தை இதற்காகவே செலவிட்டிருக்கிறார்.

ரஷ்யா யுக்ரேனைத் தாக்கப்போகிறது என்ற தகவல் அமெரிக்க உளவுத்துறைக்குக் கிடைத்துவிடுகிறது. ஒரு மாநாட்டில் சந்திக்கும் போது கமலா ஹாரிஸ் அதை நேரடியாகவே செலன்ஸ்கிக்குச் சொல்கிறார். ஆனாலும் அவர் நம்ப மறுக்கிறார். இந்த இடத்தில் அமெரிக்க உளவுத்துறையின் ஆற்றல் என்ன என்பதை நாம் உணர்ந்துகொள்ள முடிகிறது. அதே வேளையில் புடினிடமும் தொடர்ந்து பேசுகிறார்கள். யுக்ரேனைத் தாக்க வேண்டாம் என்று வேண்டிக் கொள்கிறார்கள். அப்படி ஒரு திட்டமே இல்லை என்று சொல்லிவிட்டு, அமெரிக்கா எதிர்பார்த்தபடியே யுக்ரேன் மீது தாக்குதலைத் தொடங்கிவிடுகிறார் புடின். யுக்ரேனுக்கு உதவ வேண்டும் என்பதில் தெளிவாக இருக்கிறார்கள். ஆனால் அமெரிக்கப் படை களத்தில் இறங்கவே இறங்காது என்பதிலும் தெளிவாக இருக்கிறார்கள். புடின் யுக்ரேனுக்கு எதிராக அணு ஆயுதத்தைப் பயன்படுத்த வாய்ப்பு உள்ளது என்று அஞ்சுகிறார். அது நடந்துவிடாமல் தடுக்க வேண்டிய வேலைகள் அனைத்தையும் செய்கிறார்.

2014-இல் புடின் கிரீமியா மீது போர் தொடுத்து ரஷ்யாவோடு இணைத்துக்கொண்டதற்கு ஒபாமா புடினைப் பெரிதுபடுத்தாமல் விட்டதுதான் காரணம் என்று பைடன் புலம்புகிறார். “அவன் என்ன வேண்டுமானாலும் செய்து கொள்ளட்டும் என்று உரிமம் கொடுத்துவிட்டோம். அதை நான் பிடுங்கிப் போடுகிறேன், பார்” என்கிறார்.

வெளியில் அமெரிக்கா இஸ்ரேலைக் கண்மூடித்தனமாக ஆதரிக்கிறது எனும் கருத்து இருக்கிறது. ஆனால் பின்னணியில் இஸ்ரேலுடன் அமெரிக்கா தொடர்ந்து உரையாடி உரையாடித்தான் போர் பெரிதாக வளர்ந்துவிடாமல்

பார்த்துக்கொண்டது என்கிறார். அப்பாவி மக்களைத் தாக்குவதையும் அவர்களுக்கு மருத்துவ உதவி போகவிடாமல் தடுப்பதையும் அமெரிக்கா கடுமையாகக் கண்டிக்கிறது என்கிறார். நேதன்யாகுவோடு பேசி முடித்தபின் வெறுப்பாகி தனிமையில் பேசும் போது அவரை பைடன் மோசமான கெட்டவார்த்தைகளில் திட்டுகிறார். '...... மகன்', 'கெட்ட .......பயல்' போன்ற சொற்களில். புடினையும் கூட "அந்த ..... புடின்" என்கிறார். நேதன்யாகுவுடனும் பாலஸ்தீனியத் தலைவர் மஹ்மூத் அப்பாஸுடனும் பேசி முடித்தபின், வெறுப்பாகிப் போய், "இந்த உலகத்திலேயே பெரிய ..........னுங்க இருவரோடு ஐந்து மணி நேரம் முன்னும் பின்னும் முன்னும் பின்னும் பேசுவதில் செலவிட்டிருக்கிறேன்" என்று இரைகிறார்.

பைடன் ஆட்சியின் மிகப்பெரும் தோல்வி என்று சொல்வது, ஆப்கானிஸ்தானிலிருந்து வெளியேறிய விதம். சரியான திட்டமில்லாமல் சொதப்பித்தள்ளிவிட்டார்கள் என்கிறார். இறுதியாக, எவ்வளவோ தோல்விகளும் கோளாறுகளும் இருந்தாலும் கூட, பைடனின் மொத்தக்குழுவும் திறமையும் அக்கறையும் கொண்ட குழு. அதை வரலாறு பெருமையோடு திரும்பிப் பார்க்கும் என்கிறார்.

தேர்தலுக்கு முந்தைய மாதத்தில் டிரம்ப் அமெரிக்காவின் அதிபராக இருப்பதற்குத் தகுதியே இல்லாத ஆள் என்று திட்டவட்டமாகக் கூறும் நூலை எழுதியதை இதழியல் அறம் என்றும் கொள்ளலாம், தன் நாட்டின் அல்லது மனிதகுலத்தின் மீதான அக்கறை என்றும் கொள்ளலாம், விலை போய்விட்டாரோ என்றோ ஒரு பக்கம் சாய்கிறாரோ என்றோவும் கொள்ளலாம். எப்படியிருந்தாலும் சொல்லப்பட்டவை சிறப்பான முறையில் சொல்லப்பட்டிருக்கின்றன. நம்ப முடியாதவை போல் இருப்பவை முதற்கொண்டு எல்லாமே நம்பத் தக்கனவாகவும் இருக்கின்றன. அமெரிக்க அரசியல் பிடிக்கும் என்பவர்களுக்கு பிடித்தே தீரும் நூல்.

bharathee@gmail.com ■

கவிதை

**நேசன் மகதி**

இலைகளில் படிந்து
துளித்துளியாய்
பனி ஒழுகிக்கிடக்கும்
அடர்குளிரில்
பறவையின் கூட்டில்
ஒருநாளும் கேட்டதில்லை
இருமல் சத்தம்!

nesanmahathi@gmail.com ■

கவிதை

**ராபின் மணி**

தன் இனத்தவர்கள்
கண் முன்னே வெட்டப்பட்டும்
தன் எஜமானனின்
கையில் இருக்கிறோம்
என்ற நம்பிக்கையுடன்
பலிபீடத்தில்
நிற்கிறது
"கிடா"

chemistbell@gmail.com ■



கவிதை

ரகுநாத் வ

## முடிவிலி கரங்கள்

காலத்தின் மெய்யிலிருக்கின்றன
முடிவிலி கரங்கள்
காயப்படுத்துகின்ற
வல்லிய கரமொன்றினைக்
கடந்தால் ஆற்றுப்படுத்தி வருடும்
மருந்துக் கரங்கள் பற்றுகின்றன
நிலையாமை போதிக்கும்
பெருங் கரத்தினைச் சுட்டியவாறு
மகிழ்வின் திளைப்பை
ஊட்டுகின்றன
நேசத்தின் கரங்கள்
சமயத்தின் உள்ளங்கையிலமர்ந்து
கரஞ்சுழற்றும் பணியில் ஊழிருப்பினும்
கடந்து போவென சுட்டுகிற
ஒரு விரல் தவ மொழியில்
நடைபயிலும் தாழ்களுக்கே
பரிட்சயப்படுகின்றன
முடிவிலியின் அடுத்தடுத்த
பொற்கரங்கள்!

## நினைவில் காலூன்றும் சாலை

எப்பொழுது எழுவீர்கள்
என மனதிற்குள் கேட்கிறார்
நிற்கும் ஒருவர்

அன்புகூர்ந்து என்றதும்தான்
கதவுகள் திறக்கின்றன

ஒவ்வொரு முறை கதவுகள்
திறக்கையிலும்
ஓடோடி வந்து தொற்றிக்கொள்கிறது
இணையம்

குகைக்கு வெளிச்சம்
பூசுவதாய் ஓடுகிறது
வண்டியின் முகவிளக்கு

கீழே இரயிலோடுவது
அறிந்தும் மேலே
உறங்குகிறது
அப்பர் பர்த் சமூகம்

மாய உலகில் பயணிப்பதாய்
அவதானம் சொல்கிற
மெட்ரோவினுள்

இடைவெளியினை
கவனத்திற் கொள்க
என்றதும் நினைவில்
காலூன்றுகிறது சாலை.

raghunath3784@gmail.com

சிறுகதை
கீதா

# (அப்பாவின்) நாற்காலி

“இன்னிக்கு ஞாயித்துக்கிழமை லீவு தானே? ஒரு நடை அந்த வீட்டுக்குப்போய் பாத்துட்டு வந்தாதான் என்ன? ஏன் இப்படி அழிச்சாட்டியம் பண்றீங்க”

சமீபகாலமாக ஒவ்வொரு விடுமுறையிலும் வரும் குற்றப்பத்திரிகைக் கிருதியின் பல்லவி காபியில் தொடங்கியது. என் மாமன் மகள் என்பதால் கூடுதல் சுதந்திரம்.

“அத்தையோட ஃபீலிங்ஸை மகன் உங்களால கூட புரிஞ்சுக்க முடியலை. அப்படி என்ன வீண்வீம்பு பிடிவாதமோ?”

லயம் ஓங்கிட, அனுபல்லவிக்குத் தாவியது.

“ஏன் சத்தமா பேசற? அம்மாக்கு கேட்டுச்சுனா மனசு சங்கடப்படும்”

“இதுக்கொண்ணும் குறைச்சலில்லை. அதே அம்மாவோட செண்டிமென்ட் ஃபீலிங்க்..... அவங்க ஹஸ்பண்டோட ஃபேவரிட் அந்த அழகான நாற்காலிய மட்டும்தானே கேட்டு எடுத்துட்டு வரச்சொல்றாங்க. சொத்து பங்குக்கா போய் நிக்கச் சொல்றாங்க? இல்ல நான்தான் சொல்றேனா?” என்னால் சரணம் அடைய முடியாத தருணம்.

என் கோபம் அறிந்து ‘அவங்க ஹஸ்பென்ட்’ என்று மிகக் கவனமாக அரும்பதச் சொல்லைக் கையாண்டாள். புத்திசாலி. காரியம் நடப்பதற்கான காய் நகர்த்தல். கூடவே கிடைத்த கேப்பில் தானும் சொத்துக்கு ஆசைப்படவில்லை என்ற அறிவிப்பு.

சமீப காலமாக என்றால், என் அம்மாவின் கணவன் இறந்து சொத்துகள் எல்லாம் பிரிக்கப்படுகிறது, வீடும் – மன்னிக்கவும். வீடு என்று தவறாகச் சொல்லிவிட்டேன். கேரளத்துக் கொட்டாரம் – அரண்மனை போன்ற பெரிய வீடு - விற்கப்போகிறார்கள் என்று செய்தி வந்ததிலிருந்து. ‘சொத்துகள்’ என்று வாயால் எளிதாகச் சொல்லி விடலாம். ஆனால் மதிப்பில் சொல்வது அத்தனை எளிதல்ல. அவசியமும் இல்லை.

கொஞ்சம் மரியாதை கருதி அம்மாவின் கணவன் என்றேனும் சொன்னேன். வழக்கமாக ‘அந்த ஆளைப்’ பற்றிய விஷயத்தில் மட்டும் என் வாயில் கெட்ட வார்த்தைதான் வரும்.

“இன்னிக்கு ஒரு ஃபிலிம் ப்ரொட்யூசர் வீட்டை வாங்கலாம்னு பாக்க வராராம்.” கட்டன் காஃபியைக் கலந்து கொண்டே.

எப்படியோ இவளுக்கு மட்டும் அந்த வீட்டைப் பற்றிய செய்தி கிடைத்துவிடுகிறது.

திடீரென்று மனதிற்குள் மின்னல்.

ஒருவேளை அவரோ? என் அம்மாவை விரும்பிய அம்மாவின் மாமா மகனாக இருக்குமோ? பார்க்கும் ஆர்வம் எட்டிப் பார்த்தது. இவ்வளவு செய்தி தெரிந்தவளுக்கு அதுவும் தெரியாமல் இருக்குமா என்ன? தெரிந்திருந்தால் அதையும் சொல்லியிருப்பாளே? எங்கள் இருவருக்குமே நெருங்கிய உறவுதானே! ஆனால் கேட்பதற்கு என் தன்மானம் தடை போட்டது.

“எனக்கும் அதுக்கும் எந்த சம்பந்தமும் இல்ல. புல்ஷிட்”.

ரசித்துக் குடித்துக்கொண்டிருந்த கட்டன் காபி கசந்தது! அறையை விட்டு அம்மா வெளியில் வந்த அடையாளம் இருக்கவில்லை. கொஞ்சம் தைரியம் வந்தது. அம்மாவின் கணவனை ஓங்கி அறைந்தேன். என் மனதில்தான். அது வார்த்தையாகத் தெரித்தது.

“பாஸ்டர்ட்”

“தமிழ்லேயே திட்டுடா ரெண்டும் ஒரே அர்த்தம்தான்”

அம்மா வந்துவிட்டாள். கேட்டுவிட்டது. அம்மாவிற்கு அவள் கணவனையும் முதல் மனைவிக்குப் பிறந்த குழந்தையையும் நான் திட்டுவது பிடிக்காது. டிபிக்கல் பாரத தத்துவநாரி! பாலச்சந்தர் படத்து ஹீரோயின். தியாகத் திலகம். ரோஷம், மானம், சூடு, சொரணை எந்த மண்ணும் இருக்காதா? அன்பிலீவபிள் வுமன்!

“அத்தை! உங்க மகன் வழக்கம் போலதான் பதில்...... இவருக்கு ஏன் மாமா மேல இத்தனை கோபம்? எத்தனை நல்ல மனுஷன்! நம்ம குடும்பத்தையே கரையேத்தினவரு.”

“அவனுக்குப் புரிஞ்சுக்க முடியாதும்மா, இந்த ஃபீலிங்க் எல்லாம்”

நக்கலாகச் சிரித்தேன்

“பாருங்க அத்தை, நக்கல்”

இனி இருவரையும் சமாளிப்பது கஷ்டம். நைசாக அங்கிருந்து நழுவினேன்.

“மாமா! கெட்ட வார்த்தை பேசக்கூடாது”

என் சித்தியின் பேத்திகள். என் அம்மாவிடம் தேவாரம் கற்கும் சிஷ்யைகள். சனி, ஞாயிறு விடுமுறையில் வந்துசெல்லும். பேத்திகளுக்குப் பாட்டியின் நீதி போதனைகள். என்னையும் அப்படித்தானே வளர்த்தாள். இந்த நீதி போதனைகள் எல்லா காலத்திலும் உதவுவதில்லை. அட்லீஸ்ட் எனக்கு உதவவில்லை.

சிறிய வயதில் அந்த வீட்டில் வாழ்ந்த வாழ்க்கை, எனக்கு ஏற்பட்ட அவமானங்கள், மனவலிகள், ரோஷங்கள் மனதில் ஆழமாகப் பதிந்துபோன அழிக்க முடியாத இன்ஸ்க்ரிப்ஷன்ஸ். மேலோங்கி நிற்கத்தான் செய்கின்றன. அதனால் விளைந்த தன்மான, சுயமரியாதைப் பிரச்சனை. அது பிடிவாதமாம். சொல்கிறார்கள். என்னைப் பொறுத்தவரை அது பிடிவாதம் அல்ல.

பிடிவாதத்திற்கும் தன்மானத்திற்கும் ஒரு சிறு இழைதான் வித்தியாசம். அந்த வித்தியாசம் என்வீட்டுப் பெண்களுக்குப் புரிவதில்லை. யாராலும் என் வலியை, நான் இழந்ததைப் புரிந்துகொள்ள முடியவில்லை.

அம்மா வீட்டு மனிதர்கள் யாருக்கும் எதுவும் தெரியாதே! கூட்டணிக் கட்சி, சிங்கிளான என்னால் ஒண்டியாக வீட்டுப் பெண்களோடு மல்லுக்கு நின்று மோத முடியாது.

அம்மாவுக்கு அவள் வாழ்க்கை

பிடித்திருந்திருக்கும் போலும்! அப்படி என்றால் நான் ஏன் அதில் நுழைகிறேன் உரிமை இல்லாமல்? நான்தான் என் கோணத்தில் அதைப் பார்த்து என்னைக் குழப்பிக்கொள்கிறேனோ?

நிச்சயமாக இல்லை. என்மீதான அம்மாவின் அன்பை நான் அனுபவிக்க முடியாமல் பிரிக்கப்பட்டதால் இந்தக் கொந்தளிப்பு. இந்த எண்ணம் என் மனதில் அடிக்கடித் தோன்றி என்னைக் குழப்பிச் செல்லும் ஒன்று.

யெஸ்! என்னால் என் அம்மா என்ற உரிமையில் என்னிடமிருந்து தனித்துப் பார்க்க முடியவில்லை. அந்த வாழ்க்கையின் கதாநாயகனான 'அந்த ஆள்' உலகத்துக்கு என் அப்பன், எனக்கு வில்லன்.

இந்த விஷயத்தில் மட்டும் அம்மா கற்றுக்கொடுத்த போதனைகளுடன் என் மனம் முரண்பட்டுத் தொலைக்கிறது. என் மனப்போராட்டம் அம்மாவுக்குப் புரிவதில்லை. இல்லை புரிந்தும் புரியாதது போல் இருக்கிறாளோ?

அந்த ஆளின் கர்ண கவச குண்டலம் அந்த நாற்காலிதான். அந்த நாற்காலி கவர்ச்சியான கலைநயத்துடன் இதமான மெத்தையுடன் முன்னும்பின்னும் சாய்ந்தாடும்படியான எழிலான நாற்காலி. அதை ரசிக்க முடியாதபடி செய்த அந்த ஆள்! அதில் அவனைத் தவிர….. எனக்கு 'அவர்' இல்லை அவன்தான்….. யாரும் உட்காரக் கூடாது, தொடவும் கூடாது. குறிப்பாக நான்.

சிறு வயதில் நான் ஆசைப்பட்டு அந்த அறைக்குச் சென்று அதில் உட்கார்ந்துவிட, அன்று என்னை அந்த ஆள் அடித்த அடி….. இதற்காகவா என்னை பெல்டால் விளாச வேண்டும்? என்ன காரணம் என்று புரியாத வயது….

என் மனதில் பதிந்த முதல் வலி.

இப்போது அந்த ஆள் செத்துத் தொலைந்த பின்னும், அம்மாவுக்கு அதன்மீது என்ன காதலோ? அந்த ஆளின் எந்தப் பொருளும் இந்த வீட்டிற்கு வருவதில் எனக்கு இஷ்டமில்லை.

'நீயே அந்த ஆளுக்குப் பிறந்தவன்தானே!' என் மனம் என்னை நக்கலடித்தது.

பதில் சொல்ல முடியாத இயலாமை. என் ஆத்திரம், கோபம் உச்சத்தைத் தொட்டது. டீ டம்ளரை தூக்கி எறிந்தேன். மூச்சிரைத்தது. நல்லகாலம் எவர்சில்வர் டம்ளர்.

"இன்னமும் நீ கோபத்திலிருந்து வெளில வரலை இல்லையா? நல்லதில்லைடா ராஜா உனக்கு" குளித்துவிட்டு வந்திருந்த அம்மா டம்ளரை எடுத்துக்கொண்டு போகிற போக்கில் என்னை ஒரு நொடி பார்த்த பார்வையில், 'உன்னை நான் இப்படியா வளர்த்தேன்? என் வளர்ப்பில் குறையோ' என்ற பொருள் பொதிந்த பார்வையாக எனக்குப் பட்டது. மனம் குறுகிப்போக பார்வையை வேறு பக்கம் திருப்பினேன். என்றாலும் 'நீ வளர்த்த பையன் தான்மா நான். நான் மோசமான பையன் இல்லம்மா…. என் மன நியாயங்களை உணர்வுகளைப் புரிஞ்சுக்கம்மா' என்று கதற வேண்டும் போலத் தோன்றியது.

அம்மாவின்முன் வெளிப்படுத்தத் தயங்கிய கோபம் என்னைமீறி வெளிப்பட்டுக் கொண்டிருந்தது.

அந்த ஆள் நாவினால் சுட்டதும் தந்த அடிகளும் ஏற்படுத்திய அந்த ஆறாத வடுக்கள் எனக்குத்தான் தெரியும். "தே……" நாவை அடக்கிக்கொண்டேன். "ஷிட்…." வாயில் வந்துவிட்டது!

"பதிமூணு" சித்தியின் பேத்திகளில் பெரியது சொன்னது. கெட்ட வார்த்தைகளை எண்ணுகிறாளாம். சின்னதும் சேர்ந்துகொண்டது.

மீண்டும் வாயில் வந்த கெட்ட வார்த்தையை முழுங்கிவிட்டேன். இல்லை

என்றால் 14 என்று எண்ணிக்கைக் கில்லாடி சின்னது அம்மாவின் காதில் விழும்படி ஓதித் தொலைக்கும். சிறிய வயதிலேயே ஏதோ எல்லாம் தெரிந்தது போல பாட்டிக்கு வக்காலத்து வாங்கும்.

"ம்மா... எனக்கு அந்த ஆளைப் பிடிக்கலை" இதைத்தான் நான் அன்று அம்மாவிடம் அடிக்கடி சொன்னது.

"என் குட்டிப்பையா, 'அந்த ஆள்'னு சொல்லாதடா கண்ணா. உங்கப்பா அவர். அவர்மேல கோபம் வேண்டாம்பா. நல்லவர். அவர் நம்ம குடும்பத்துக்கு ரொம்ப உதவறார்டா கண்ணா"

என் 7வது வயதில் என்னை அணைத்துக்கொண்டு தலையைத் தடவி ஆறுதல் சொன்னவள். ஒவ்வொரு அடியின் போதும், என்மேல் வந்து விழுந்த கெட்ட வார்த்தைகளின் போதும்...

"ஆறுவது சினம்" – நீ சொல்லிக் கொடுத்த ஆத்திச்சூடிம்மா.... என்னைவிடப் பெரிய அந்த ஆள் படிச்சதில்லையா? அவருக்குச் சொல்லிக் கொடு."

"கண்ணா உன் நல்லதுக்குத்தான் சொல்றேம்பா.... அதை ஆத்தினாலும் மனசுக்கு அடில அது குளிர்ந்துபோன எரிமலை போல உக்காந்துருக்கும்டா. சில சூழல்ல அது ட்ரிகர் ஆகி வெடிச்சுடும் கண்ணா. அதனாலதான் இப்பவும் சொல்றேன், நல்லதை நினை, உங்கப்பா மேல நெகட்டிவ் தாட்ஸ் வேண்டாண்டா. அதுலருந்து முழுசுமா வெளில வந்துருன்னு."

"நல்லதா? என்னம்மா நல்லது? அந்த ஆள் என்மேல எதுக்குக் கோபப்படுறார்னு எனக்குச் சத்தியமா புரியலை... ஆனா என் சினம் ஆறா சினம்மா."

என் 7, 8 வயதுகளில் எனக்கும் அம்மாவிற்குமான உரையாடல்கள் இவை. வயதிற்கு மீறிய அனுபவ அறிவு எழுப்பிய பேச்சு.

அம்மா உச்சி முகர்ந்து கண்ணை மூடிக்கொண்டு என்னை அணைத்தபோது அம்மா சந்தோஷமாகத்தான் இருந்தாளோ? ஆனால் என் மனம் இன்னும் வெறுத்தது அந்த ஆளை. வெறுப்பில் கூட இன்னும் என்ற சொல்லைச் சேர்த்துக் கூட்டுகிறேன்! வெப்பத்தின் டிகிரி!

அம்மா சொன்ன, ஆறிய அந்த எரிமலைதான் கொஞ்சம் கொஞ்சமாக வெடித்துக் குழம்பைக் கக்கிக்கொண்டிருந்தது, அனல் தெறிக்கும் கோபமாய்.

இப்போதும் என்னால் அந்தக் கேடுகெட்ட மனுஷன் மீதான கோபத்திலிருந்து மட்டும் வெளியில் வரமுடியவில்லை. வடு அவ்வப்போது கீறப்பட்டுக் கொண்டே இருக்கிறது. இப்போது நாற்காலி! ரணம்.

நான் அம்மாவைத் தேடினேன். அம்மா கண்ணை மூடிக்கொண்டு அமர்ந்திருந்தாள். எனக்காகத்தான்.... என் கோபம் என்னை விட்டு அகல வேண்டும் என்று.... இந்த நல்ல மனுஷியை அந்தப் பொறம்போக்கு.... ச்சே...

நானும் கண்ணை மூடிக்கொண்டு அமர்ந்தேன். எரிமலை மீண்டும் குழம்பைக் கக்கத் தொடங்கியது.

"அம்மா நாம ரெண்டு பேரும் வேற எங்கயாச்சும் போய் இருக்கலாம். நீ முன்னாடி செஞ்ச டீச்சர் வேலை பாக்கலாம். நான் உனக்குத் துணையா இருந்து பாத்துக்குவேம்மா"

கண்ணை மூடிக்கொண்டு அமர்ந்திருந்த அம்மாவிடம் நான் என் 10வது வயதில் பெரிய தோரணையில் சொன்னது.

"ரொம்ப பெரிய மனுஷன் மாதிரி பேசறே! நீ நிறைய படிக்கணும்டா ராஜா! பெரிய ஆளா வரணும்"

"இந்த வீட்ல இருந்தாம்மா? இவர் அப்பாவா? அப்படின்னா என்ன

அர்த்தம்மா? எதுக்கு என்னை உங்கிட்டருந்து பிரிக்க நினைக்கிறார்? நான் இங்க இருக்கக் கூடாதாம். இடைஞ்சலாம்... இங்கருந்து என்னால படிக்க முடியாதுமா.''

அம்மா டக்கென்று கண்ணைத் திறந்து என்னை உற்று நோக்கினாள்.

“நீ இடைஞ்சல்தான். பரதேசி நாயே. எங்கியாவது போய்த்தொலைடா. அப்படியே ஒழிஞ்சு போ''

அந்த ஆள் அங்கு வருவார் என்று நான் சற்றும் எதிர்பார்க்கவில்லை.

“உன் பரதேசிப் பிள்ளை எதிர்த்துப் பேசறான். என்னை திருத்தறானாம். நீ அவனுக்குப் போதிக்கற பாடம்தான். யாருக்குடி வேணும் உன் போதனையும் படிப்பும் குப்பைல போடு.''

என்னை பெல்டால் விளாசினார். எதிர்க்கும் தைரியம் தலைதூக்கியது. அந்த பெல்டைப் பிடித்து இழுத்தேன். அம்மா என்னை அணைத்துக்கொண்டாள். அந்த ஆள் சொன்ன கெட்ட வார்த்தை அப்போது புரியவில்லை.

“என்னை விட அவன்தான் உனக்கு முக்கியம்னா வெளில இறங்கிடு. உங்க அப்பனுக்கு நான் கொடுத்த பணத்துல முழுசையும் வட்டியோடு சேத்து வைச்சுட்டு....'' சொல்லிக்கொண்டே உள்ளே சென்றுவிட்டான்.

“இதுக்குத்தாம்மா நான் சொன்னேன், நாம போய்டலாம்மா.'' வலியிலும் முனகினேன்.

உள்ளே சென்ற அந்த ஆள் ஏதோ குரல் கொடுத்தான். ஆறுதல் சொல்லிக்கொண்டிருந்த என் அம்மா விருட்டென்று எழுந்து சென்றாள். கதவு மூடும் சத்தம் என் மனதில் அறைந்தது.

என் மனதில் ஆழமாகப் பதிந்த இரண்டாவது வலி.

அம்மா சிறிது நேரத்தில் குளித்துவிட்டு வந்தாள்.

இது வழக்கமாக நடப்பதுதான். நான் பள்ளியிலிருந்து வரும்போது எனக்கு அம்மா இருக்க வேண்டும். ஆனால் பல நாட்கள் கண்ணில் படமாட்டாள். அந்த ஆளின் முதல் மனைவியின் குழந்தைகள் என்று சொல்லப்பட்ட 2 சோம்பேறி தெருப்பொறுக்கித் தெனாவெட்டுகள் வீட்டில் இருந்தால் என்னைக் கெட்ட வார்த்தைகள் சொல்லி விரட்டும்.

கொட்டாரம் போன்ற அந்தப் பெரிய வீட்டில் அம்மாவை நான் தேடிக் களைத்துப்போகும் சமயம் அம்மா வருவாள். என்னைக் கண்டதும் 10 நிமிடம் என்று சைகையால் சொல்லிவிட்டுக் குளித்துவிட்டு வந்து என்னைக் கட்டிக்கொள்வாள். அம்மாவுக்கு அவள் வாழ்க்கை பிடித்திருந்ததோ? கேள்வியுடன் அம்மாவின் முகத்தை நோக்கினாலும் பொருள் பிடிபடாத கண்கள், புன்னகை. அம்மாவின் கண்ணில் கண்ணீர் இருந்ததோ!? என் கற்பனை!

சிலசமயம் அம்மாவைத் தேடித்தேடிக் களைப்பில் தூங்கிப்போன நாட்களும் உண்டு. அப்போது எனக்குக் காரணம் தெரியவில்லை.

என் மனதில் ஆழமாகப் பதிந்துபோன மூன்றாவது வலி.

அந்த ஆளின் கர்ண கவசமாகக் கிடந்த அந்த நாற்காலியின் அர்த்தம், அந்த ஆளின் கோபத்தின் காரணம், ஒரே நாளில் பல தடவை அம்மா குளித்ததன் காரணம் எல்லாம் 13வது வயதில் பருவ வயதைத் தொட்டபோது புரிந்தது. ஹைப்பர் செக்ஷுயாலிட்டி-ஸட்டைரியாஸிஸ்/ satyromaniac. நான் வெறுப்பின் எல்லையில். வெளியில் பெரும் பணக்கார நல்ல மனசுள்ள ஊருக்கே உதவும் மனிதன். வேஷம்.

அதிர்ச்சியில் எனக்கு நான்காவது வலி.

அதனால்தான் அம்மா என்னோடு நேரம் செலவழித்தல் அந்த ஆளிற்குப் பிடிக்கவில்லை. அந்த ஆளின் அதிகபட்ச இச்சைக்கு நான் இடைஞ்சல். அதனால் கோபம். என்மீது வெறுப்பு. இதற்காகவா பெல்டால் விளாச வேண்டும்? ச்சே!

என்னையும் அம்மாவையும் இணைத்துப் பேசிய வார்த்தைகள் கொடூரத்தின் எல்லை.

ஐந்தாவது வலி.



என் அம்மாவிடம் நேரடியாகக் கேட்கும் தைரியம் அப்போதும் இல்லை, இப்போதும் இல்லை. எப்படிக் கேட்பது? அம்மா அதை இயல்பாக எடுத்துக்கொண்டிருந்தால்? என் மனம் கூசிப்போனது.

அப்படியான நாற்காலியின்மீது அம்மாவுக்கு ஏன் இந்தப் பற்று? அன்பிலீவபிள் வுமன். என்னால் புரிந்துகொள்ள முடியவில்லை.

அம்மாவிற்கு முன்னான, அந்த ஆளின் மனைவியோ அல்லது வேறு ஏதோ ஓர் அர்த்தத்தில் சொல்லப்பட்டவளோ இந்த ஆளை விட்டுச் சென்றதற்குச் சொல்லப்பட்ட காரணங்கள் கட்டுக்கதைதானோ? மனைவி போகப்பொருள். பெரும்பாலும் லிபிடூ-வில் இருந்தவனைச் சமாளிக்க முடியாமல், வெளியிலும் சொல்ல முடியாமல், தன் 2 குழந்தைகளும் கூட வேண்டாம் என்று ஓடிவிட்டாளோ! அப்படித்தான் இருக்க வேண்டும்.

எனக்கு அம்மாவின்மீது கோபம் வந்தது. படிப்பறிவு இல்லாத அந்தப் பெண்மணிக்கு இருந்த முடிவெடுக்கும் தைரியம், நல்ல படிப்பும், வாசிப்பு அறிவும், கல்யாணத்திற்குமுன் ஆசிரியையாக வேலை பார்த்த தன் காலில் நிற்க முடிந்த தகுதியும் கொண்டிருந்த என் அம்மாவிற்கு ஏன் இல்லாமல் போனது? சமூக பயம்? கல்லானாலும் கணவன் புல்லானாலும் புருஷன் எனும் பாரதக் கலாச்சாரம்? அறிவும், கல்வியும், வாசிப்பும் ஏற்படுத்திய ஏதோ வக்கத்து சொல்லப்படும் அன்கண்டிஷனல் லவ் என்ற தத்துவ மனப்பக்குவம்? ஸ்டுப்பிட்! ரிடிக்குலஸ்!

வழக்கமான சோஷியல் ஸ்டிக்மா! ஏழ்மை. தம்பி தங்கைகள் படித்திடக் கடன் கொடுத்த இந்த தூரத்துச் சொந்தமான ஆள் பாரிவள்ளல்! அதனால் இரண்டாவது மனைவியாக கல்வி வாசனையே சுத்தமாக இல்லாத இந்தக் குடும்பத்திற்குக் கடமைப்பட்டவளாக அவன் இச்சைக்குச் சட்டரீதியாக விலைக்குப் போன அம்மா! தியாகம்? என்னால் ஏற்க முடியவில்லை.

பருவ வயதில் வந்த தைரியத்தில் அம்மாவின் சார்பாக நான் அந்த ஆள் கை ஓங்கியபோதும் பெல்டை எடுத்தபோதும் அவனின் கையைப் பிடிக்கத் தொடங்கினேன். என் பலத்தைப் பிரயோகிக்க முயற்சித்தேன். நான் அங்கிருந்தால் என் கோபத்தில் என் படிப்பு கெட்டுவிடும் என்று என் அம்மா என்னை என் மாமாவுடன், தாத்தா பாட்டி வீட்டுக்கு அனுப்பிவிடத் தீர்மானித்தாள்.

என்னை அழைத்துச் செல்ல என்ன... மாமா வரும் நேரம் ஆகிவிட்டது என்றுதான் மேசையில் சாப்பாட்டை எடுத்து வைத்தாள்.

"தேவாரம், திருவாசகம், திருக்குறள்னு இருந்த நீ இப்பலாம் அதைச் சொல்றதே இல்லையேம்மா!"

தமிழில் முனைவர் பட்டம் பெற்றிருந்த என் அம்மாவின் நிலை என்னை மிகவும் உருக்குலைத்தது.

"யார் சொன்னா? அது உன் காதுல விழலடா கண்ணா. ஏன்னா, இந்த வயசுல தேவையில்லாத சிந்தனை உன் மனசுல வேற மாதிரி போகுது..."

சாப்பாட்டைத் தட்டில் எடுத்து வைத்தாள்.

"மலரினும் மெல்லிது காமம்………" மெதுவாக எனக்குள் சொல்வது போல் தண்ணீரைக் குடித்துக்கொண்டே சொன்ன நான் வேண்டுமென்றே நிறுத்தி புரைக்கேறியது போல இருமினேன். அம்மாவின் ரியாக்ஷன், உணர்வுகள் அவள் முகத்திலோ உடலிலோ தெரிகிறதா என்று மறைமுகமாகப் படித்திட நினைத்த என் எதிர்பார்ப்பு ஏமாற்றமாகியது.

"இதுக்குத்தான் கண்டதை யோசிச்சுக்கிட்டே சாப்பிடக் கூடாதுன்னு உனக்கு சொல்லியிருக்கேன்ல……"சிலர் அதன் செவ்வி தலைப்படுவார்." என்று இயல்பாகச் சொல்லி முடித்தாள்.

"அப்பாக்கு உன்னைப் பிடிக்கும்தாண்டா….. அதை அவருக்குக் காட்டத் தெரியலை அவ்வளவுதான்...."

"ஹூம். ஜஸ்டிஃபிக்கேஷன்?..."

"நீ நம்பலை இல்லியா? அம்மா சும்மா பொய் சொல்வேனா சொல்லு?"

ஒருவேளை உண்மையாகத்தான் இருக்குமோ? இருந்துவிட்டுப் போகட்டும். என்னால் ஏற்க முடியவில்லை என்பதுதான் உண்மை.

நான் பதில் சொல்லாமல் சாப்பாட்டை அளைந்தேன். என் உடல்மொழி, கண் அசைவு, சைகைகளை வைத்தே என் உணர்வுகளைப் படித்துவிடுவாள் அம்மா.

"ஏதோ யோசனை ஓடுது போல?"

"யெஸ்! அப்ப ஏன் அவர் என்னை பொறந்திருக்கக் கூடாது, வேண்டாம்னு சொல்றாரு? உன்னை அபார்ட் பண்ணச் சொன்னாராமே." அம்மாவிற்காக நான் அந்த ஆளை மரியாதையில் பேசிய வார்த்தைகளை முடிப்பதற்குள்,

"அது ஒரு கோபத்துல சொல்றது. அதை எல்லாம் சீரியஸா எடுத்துக்கக் கூடாதுடா....."

"வெல்! அப்ப ஏன் நீ என்னை மாமாவோட அனுப்பணும்? நா போய்த்தான் ஆகணுமாம்மா? நான் இங்க உனக்கு ஆதரவா இருப்பேன்மா"

"எனக்கு எதுக்குடா ஆதரவு? என்ன குறைச்சல்? நீ மாமாவோடு போய்டு. உன் நல்லதுக்குத்தான்... நீ சொல்லுவியே இங்க இருந்தா என்னால படிக்க முடியலைன்னு.... இப்ப கூட அப்பா மேல கை ஓங்கற…… உனக்கு இது க்ரூஷியல் வயசு. உன் எதிர்காலத்துக்கு விதை போடற பீரியட். உன் கோபம் உன் எதிர்காலத்தைப் பாதிச்சுடும்னு எனக்குப் பயம் வருது.... ஸோ...."

என் கண்களில் கண்ணீர். மறைத்துக்கொண்டேன் தொண்டை அடைத்தது. அம்மா என் வார்த்தைகளை, என் கோபத்தை வைத்தே யதார்த்தத்தை, தன் முடிவை ஜஸ்டிஃபை செய்தாள். அம்மாவே சாப்பாடை எடுத்து எனக்கு ஊட்டத் தொடங்கினாள். அம்மா ஊட்டத் தொடங்கியதும் சாப்பாடு மாயமாய் தொண்டைக்குள் இறங்கத் தொடங்கியது. அம்மாவின் அன்பின் சக்தி!

"உன் எதிர்காலம் முக்கியம். வாழ்க்கையும் இந்த உலகமும் ரொம்ப

அழகானது, நீ அதை ரசிக்கணும்டா கண்ணா.... அதுக்குத்தான்''

நான் சட்டென்று அம்மாவை நிமிர்ந்து பார்த்தேன். அவள் கண்களை நேருக்கு நேர் உற்றுப் பார்த்தேன். அம்மாவால் இந்த உலகை, வாழ்க்கையை ரசிக்க முடிகிறதா? என் மனதில் ஓடிய சிந்தனையை புரிந்துகொண்டது போல், அம்மா புன்சிரிப்போடு 'ஆம்' என்பது போல் கண்ணை மூடித்திறந்து இடக்கையால் என் தலையைக் கோதினாள்.

அம்மா என்னை சமாதானப்படுத்த அப்படிச் சொல்கிறாளா இல்லை நிஜமான வார்த்தைகளா என்று அவளது முகபாவத்திலிருந்து என்னால் யூகிக்க முடியவில்லை.

அகத்தின் எண்ணங்கள் கண்களின்வழி, வார்த்தைகளின்வழி தெரியும் என்பதெல்லாம் அம்மாக்களுக்குச் செல்லுபடியாகாது போலும். குழந்தையின் மகிழ்ச்சிக்காக என்ன வேண்டுமானாலும் பேசும் தாய்மை? இல்லை இதுவும் என் கற்பனையோ?

"இதையே யோசிச்சிட்டே இருந்தா மனசு கெட்டுப் போய்டும்டா கண்ணா.."

எனக்கு அம்மா அனுப்புவதன் அர்த்தம் லேசாகப் புரிவது போல இருந்தது அப்போது.

"உனக்கு இங்க டைவெர்ஷன் இல்லை. அதனாலதான் மாமாவோட போனா அங்க மனுஷங்க நிறைய. உனக்கும் மனசு டைவேர்ட் ஆகி லகுவாகிடும்டா... உனக்கு அம்மா மேல நம்பிக்கை இருக்குதானே?"

அம்மா கண்டிப்பாக எனக்கான நல்ல முடிவுதான் எடுத்திருப்பாள் என்று முழுமையாக நம்பினாலும் நீறு பூத்த நெருப்பு போல ஆழ்மனதுள் எரிமலை கனன்று கொண்டுதான் இருந்தது.

"லைஃப் இஸ் ப்யூட்டிஃபுல்? சிலருக்கு வாழ்க்கை எவ்வளவுக்கு எவ்வளவு அழகோ, ஒரு சிலருக்கு அது வில்லன்தான்''

என் வாயிலிருந்து வார்த்தைகள் தெரித்தன.

"டு யு மீன் இட்?''

"யெஸ்மா. நிச்சயமா.... எனக்கு''

"நீ என் உயிர். இந்த உயிர் எனக்குக் கிடைக்க காரணம் உன் அப்பாதானே! உன் மாமா, உன் சித்திகள் எல்லாரும் படிக்க, கடன் கொடுத்து அவர் ஹெல்ப் பண்ணிருக்காரில்லையா. அவர்மேல எந்த வெறுப்பும் வைச்சுக்காம மாமாவோட போய் படிப்புல கவனமா இருந்து நல்லா படிக்கணும்டா ராஜா. நீ வெளில பறந்து பாரு. வாழ்க்கை எவ்வளவு அழகுன்னு புரிஞ்சுப்ப''

வியப்புடன் அம்மாவைப் பார்த்தேன். அம்மாவா இதைச் சொல்கிறாள்? அப்ப ஏன் அம்மாவுக்குப் பறந்து செல்லும் ஆசை இல்லை? தன்னால் முடியவில்லை. மகன் பறக்கட்டும் என்ற அன்போ?

என் வாதத்தை விடவில்லை.

"கடன் கொடுத்துதானே படிக்க வைச்சார்? வட்டியோட அடைக்கறாங்கதானே? நான் இடைஞ்சல்னு சொன்ன இந்த ஆளு....... எல்லாத்துக்கும் எனக்கு இப்பக் காரணம் தெரியும்மா..... ஐ ஆம் நாட் எ சைல்ட். என்மேல வெறுப்பைக் கொட்டற இந்த ஆளுக்கு நீ சப்போர்ட்? உன்னை என்னால புரிஞ்சுக்க முடியலைம்மா. யு ஆர் எ மிஸ்டீரியஸ் வுமன்'' இதைச் சொன்னபோது என் கண்களில் கண்ணீர். அம்மா பதில் சொல்லாமல் சாப்பிட்ட தட்டு, பாத்திரங்கள் எல்லாவற்றையும் எடுத்துச் சென்றாள்.

மாமா வந்தார்.

"என்ன தம்பி அம்மாவை விட்டு வரோம்னு வருத்தமாருக்கா?''

அம்மா ஏன் என்னை அவருடன்

அனுப்புகிறாள் என்று மாமா ஒரு வார்த்தை கூடக் கேட்காதது என்னை மிகவும் ஆச்சரியப்படுத்தியது. அம்மா சொல்லியிருப்பாளோ? மாமாவுக்கும் அந்த வீட்டினருக்கும் எல்லாம் தெரியுமோ? என்ற என் சந்தேகம் அம்மாவின் அடுத்த உரையாடலில் உடைந்து போனது.

“தம்பி, திரும்பவும் கேட்டுக்கறேன்.... இவனை அங்க அனுப்புறதுல நம்ம வீட்டுல எந்தப் பிரச்சனையும் இல்லைதானே? இவன் அங்க இருந்தா இன்னும் நல்லா படிப்பான். இங்க எனக்கு வீட்டு வேலை, தோட்ட வேலையே சரியா இருக்குப்பா...... கவனிக்க முடியலை....அதான்...”

அம்மாவின் பதில் என்னை வியப்பிலாழ்த்தியது. பொய்மையும் வாய்மையிடத்த....?

“என்னக்கா இப்படி ஒரு கேள்வி கேட்கற? காரணம் சொல்ற? எவ்வளவு பெரிய ஆளு நம்ம அத்தான்........ இதுகூட நாங்க செய்யலைன்னா.....? அத்தான் எங்கக்கா? அவருக்கும் சம்மதம்தானே?”

மாமாவிற்கு அந்த ஆளின் மீதான மரியாதையைப் பார்த்துப் பிரமித்துப் போனேன்.

சம்மதம் இருக்காதா அந்த ஆளுக்கு! இந்த ஆளின் பணத்தில் நான் படிக்க விரும்பலை என்று சொல்ல வந்ததை மாமாவின்முன் வேண்டாம் என்று தவிர்த்தேன்.

“சம்மதம்தான்பா. அவரு வெளிய போயிருக்காரு. ஏதாச்சும் வேணும்னா தயங்காம கேளு சரியா?”

“இல்லைக்கா இப்ப என்ன குறை? எல்லாரும் நல்லாதானே இருக்கோம்! என் மருமகன எங்களால படிக்க வைக்க முடியாதா என்ன?”

என் மனதில் ஓடிய எண்ணங்களுக்குப் பதிலும் கிடைத்தது.

அம்மாவைப் பிரிய முடியாமல் என் மனம் விக்கித்துப் போனது.

இது ஆறாத ஆறாவது வலி.

மாமாவுடன் சென்றதும் பாட்டி, தாத்தா, சித்திகள், மாமா குடும்பம், அன்பு, கலகலப்பு, தேவாரம், திருவாசகம், அறிவார்ந்த விவாதங்கள் என்று அந்த வீட்டுச்சூழல் என் மனதை லகுவாக்கியது என்னவோ உண்மைதான். ஆனால் மனதின் ஓரத்தில் இருந்த அந்த ஆறாத ரணங்கள் வலித்துக் கசிந்து கொண்டிருந்தன.

அவர்களுக்கு அம்மாவின் வாழ்வு பற்றி எதுவும் தெரிந்திருக்கவில்லை என்பதால் நானும் எதுவும் வெளிக்காட்டிக் கொள்ளவில்லை. அதைவிட அவர்கள் அந்த ஆளின் மீது வைத்திருக்கும் மதிப்பும் மரியாதையும் என் நாவைக் கட்டிப்போட்டது. சொன்னால் நான்தான் குற்றவாளியாகி விடுவேனோ என்ற பயம்.

பாட்டியும் தாத்தாவும் தங்கள் உடன்பிறப்புகள், அவர்கள் தலைமுறை என்று ஒரு சிலரை அறிமுகப்படுத்தினார்கள்.

உறவுகள் பற்றி ஃபோட்டோக்களைக் காட்டிச் சொல்லிக்கொண்டிருந்த போது பேச்சோடு பேச்சாகச் சொன்னார் பாட்டி.

“இந்தா இதுதான் என் பெரிய அண்ணன் மகன். உங்கம்மாவைத்தான் கட்டிப்பேன்னு நின்னான். நல்லா படிச்சவன்தான். ஆனா உங்க தாத்தாவுக்கு அவன் சினிமா தொழிலுக்குப் போறான்னு பிடிக்கலை. மாட்டேன்னு பிடிவாதமா மறுத்துடாரு.”

“அம்மாவுக்கும் அவரைப் பிடிச்சிருந்துச்சா, பாட்டி?”

“எனக்கு அது சொல்லத் தெரியலை. ஆனா ரெண்டு பேரும் பொஸ்தகம், கதை, கவிதைன்னு நிறைய பேசிப்பாங்க.”

‘தாத்தா பிடிவாதமாக இருந்திருக்கலைன்னா உங்க பொண்ணோட வாழ்க்கையே வேற மாதிரி இருந்திருக்கும்’

வேதனையிலும் கோபத்திலும் என் ‘நா’ சொல்லத் துடித்தது. மனம் அதைத் தொண்டைக்குழிக்குள் பந்தாய் சுருட்டி அடைத்தது.

“இப்ப அவர் எங்க இருக்காரு? என்ன செய்யிறாரு பாட்டி?”

“என்ன செய்யிறான்னு யாருக்குத் தெரியும்? என் அண்ணன் மகன்லா. நல்ல பையனா இல்லாம இருப்பானா? ஆனா அவன் சினிமா பக்கம் போனதால இந்த வீட்டுல உங்க தாத்தா அதுபத்தி பேசக்கூடாதுன்னுட்டு, பெரியண்ணன் குடும்பத்தோட தொடர்பே இல்லாம போச்சு. அவங்க எல்லாம் மெட்ராஸ்லதான் இருக்காங்கன்னு கேள்வி. மத்தபடி அதுக்குப் பொறவு சேதி ஒன்னும் இல்லை. நாமளும் உங்க தாத்தா சோலிக்காக ஊரை விட்டு வந்த பொறவு ஊர் தொடர்பும் இல்லாமதானே இருக்கோம்.”

பாட்டி வருத்தப்படுகிறாளா இல்லை தாத்தாவை ஆமோதிக்கிறாளா? அனுமானிக்க முடியவில்லை. சிறிது நேர அமைதி.

“ஹாங்.... ரொம்பக் கஷ்டப்பட்டானாம். அவனை கெட்டியிருந்தாலும் எம்மக கஷ்டம்தான் பட்டிருப்பா. இப்ப பாரு நல்லா இருக்கால்லா? என்ன கொறைச்சல்?”

பாட்டியின் எண்ணம் எனக்கு வியப்பாக இருந்தது.

“எத்தன தடவை சொல்றது. அவன் பேச்சை எடுக்காதன்னிட்டு? இனி எடுத்த.... நடக்கறதே வேற. சின்ன பிள்ளை கிட்ட போயி இந்தக் கதை எல்லாம்..... தம்பி.... உன் படிப்பை பாரு. வெட்டிக்கதை கேட்டு கெட்டுறாத”

தாத்தா வந்தது தெரியாமல் பாட்டி பாட்டுக்குப் பேசி வாங்கிக் கட்டிக்கொண்டாள். நான் தாத்தாவுக்கு பதில் சொல்ல முயன்றபோது என்னிடம் சைகையால் பேசாதே என்று சொல்லி நகரச் சொன்னாள்.

எனக்கு அந்த வீட்டின் மனப்பாங்கு புரிந்தது. இவர்களின் கபடமற்ற மனதும் என் அம்மாவும் பலியாடுகள். பயமும், வக்கற்ற கொள்கைகளும், இயலாமைகளும், பாதுகாத்துக்கொள்ளும் அறிவும் திறனும் இல்லாதவர்கள் இந்த சமூகத்தின் பலியாடுகள்தான். இரையைக் காட்டி இழுத்து நசுக்கும் கூட்டம் இருக்கத்தான் செய்யும்.

அவ்வப்போது அம்மாவைப் பார்க்கச் சென்றபோது அந்த வீடு என் மனதுள் எழுப்பிய கோபம் நாகப்பாம்பு போல் படமெடுத்துக் கொத்துவதற்குத் தயாராகக் காத்திருந்தது.

என்னை மாமாவுடன் அனுப்பியது அந்த ஆளின் மனதில் சிறிதுகூட சலனத்தை ஏற்படுத்தவில்லை. அவனுக்குத்தான் அம்மா என்னோடு நேரம் செலவழிப்பதே பிடிக்காதே. அவன் ஆட்டத்திற்கு இடைஞ்சல் தொலைஞ்சது என்று எண்ணியிருப்பான். அந்தக் கவச நாற்காலியின் ஆட்டத்தின் அர்த்தம் புரிந்தபோது ...ச்சே! மிருகம்.

அந்த வெறுப்பு என்னை மன உளைச்சலுக்கு ஆளாக்கிய போதெல்லாம் பயந்திருக்கிறேன். எங்கேனும் மனநோயாளியாகி விடுவேனோ என்று.

அம்மா என்னை மாமாவோடு அனுப்பியது எவ்வளவு சரி என்று எப்போது நினைத்துப் பார்த்தாலும் தோன்றும்.

நான் விவசாயப் படிப்பில் மேற்படிப்பு, ஆராய்ச்சி என்று முடித்ததும் அம்மாவைப் பார்த்து அழைத்துவரச் சென்றேன். அம்மா பூரித்துப் போனாள்.

“அம்மா! அக்ரிகல்சுரல் ரிசர்ச் டிப்பார்மென்ட்ல போஸ்டிங்..”

என்னை உச்சி முகர்ந்தாள். அம்மாவின்





உடல் மிகவும் நலிந்து போயிருந்தது. கேட்டேன்.

“வயசாகுதில்லையா.... நாச்சுரல் தானே”

“ஐ டோன்’ட் திங்க் ஸோ.”

“ஸ்டில் இன் எமோஷனல் ஹாங்கோவர்?” சிரித்துக்கொண்டே கேட்டாள். “நல்லதில்லைடா செல்லம்...... நான் சந்தோஷமாத்தான் இருக்கேன்பா.”

“கிளம்பும்மா, என்கூட வா. அதுக்குத்தான் வந்திருக்கேன்”

“எங்க?”

“என்னம்மா கேள்வி? ஆர் யு மாட்? நம்ம வீட்டுக்கு. எனக்குதான் வேலை கிடைச்சிருச்சே”

“……………………… கொஞ்ச நாள் பொறுத்துக்கயேன்.”

எனக்குக் கோபம் தலைக்கேறியது. நான் கண்ணை மூடிக்கொண்டு பெருமூச்செடுத்து ஆசுவாசப்படுத்திக் கொண்டேன். புரியாத புதிரான அம்மா! என் தலையை வருடினாள்.

“நீ எனக்குச் சொல்லியிருக்கியே கடமையைச் செய் பலனை எதிர்பார்க்காதன்னு. கடமைன்னா என்னம்மா?”

“சொல்லியிருக்கேன்......”

“ஸ்டாப் இட். அந்தக் கடமை அப்பன்ற அந்த ஆளுக்கும் பொருந்தும்தானே?” என் குரல் உயர்ந்தது.

“…………………”

“உன்னால பதில் சொல்ல முடியாது. நான் சொல்றேன். எதிர்ல இருந்த சொந்த பந்தங்களோட சண்டை போடணுமான்னு அர்ச்சுனனுக்குக் கலக்கம்.... கிருஷ்ணர் என்னம்மா சொன்னார்? நீ சொல்லிக் கொடுத்ததுதான்....

“…………………..நீ வளர்ந்துட்ட. ரொம்ப யோசிக்கிறன்னு தெரியுது”

“டோன்ட் டைவெர்ட் மீ. உனக்கு வேணா ஹஸ்பென்ட் அப்படின்ற கடமையோ… தத்துவமோ… என்ன வேணா இருக்கலாம்..... ஆனா எனக்கு அப்படி இல்ல. வெல், நீ சொல்லிக் கொடுத்தியே, அதான், கிருஷ்ணர் அர்ஜுனனுக்குச் சொன்னதை அப்ளை பண்ணட்டுமா? அந்த ஆள்கிட்ட? இது எனக்கும் அந்த ஆளுக்குமான போர்க்களம். யுத்தம்”

“வேண்டாம்டா கண்ணா. கோபம் வக்கிரத்துக்கும், பழிவாங்கவும் தூண்டிவிடும்டா. ப்ளீஸ். அதிலருந்து வெளில வந்துடு. இப்ப உனக்கு வேலை கிடைச்சிருக்கு… உன் வாழ்க்கை தொடங்கற நேரம், நிறைய தூரம் போணும்டா ராஜா.”

“ஸ்டாப் இட் மா. உன்னை மாதிரி ஐ ஆம் நாட் புத்தா.”

“…………………”

“அன்கண்டிஷன்ல் லவ்ன்றது எல்லாம் ஐடியாலஜி! ஹம்பக்! ஸாரி… புத்தான்னும் சொன்னது தப்புதான். அவர் தன் கடமையைச் செய்யலை..... ஸாரிம்மா இந்த விஷயத்துல உன் போதனைகளை என் மனசு மீறுது”

அம்மா கண்ணை மூடிக்கொண்டு பெருமூச்சு விட்டாள். “டேப்பா யோசிக்கற...... நான் சொல்ல வரத… கொஞ்சம் லிசன் பண்ணு ராஜா....”

“ஐ அம் அன் இண்டிபெண்டன்ட் அடல்ட் நௌ. எங்க அந்த ஆளு? எனக்கு அந்த ஆள நிக்க வைச்சுக் கேட்க வேண்டியது நிறைய இருக்கு. இவ்வளவு நேரம் சத்தமாதானே பேசிட்டிருக்கேன். வீட்ல இல்லையா? இல்லை.... போர்க்களத்துல எதிர்க்க தைரியமில்லாம புறமுதுகோடிட்டானா?” என் கண்கள் அந்த ஆளைத் தேடியதைப் பார்த்த அம்மா புரிந்துகொண்டாள்.

“அவர் இப்ப உன்கூட சண்டை போடுற

நிலைல இல்லை.... படுக்கைல...''

"ஹ்ஹ.... இயற்கைக்கு முரணா போனா அது அப்படித்தான் பழிவாங்கும்... ஆனா .....'' என் குரல் தடுமாறியது. "அதுல என் அம்மாவும் சிக்கிக்கிட்டு'' என்ற வார்த்தைகள் வெளியில் வரவில்லை. என் அம்மாவின் நலிந்த தேகம் என்னை உடைய வைத்தது.

"இங்க பாருடா கண்ணா, கொஞ்ச நாள் பொறுத்துக்க.... நான் உன்கூட வந்துருவேன்...''

என் மனம் விரக்தியடைந்தது.

"என்ன சாப்பிடறடா ராஜா?''

"ஹ்ஹ.... இந்த வீட்டிலயா? நெவர்... உன்ன கூட்டிட்டுப் போறதுக்குத்தான் வந்தேன். நீ வரமாட்டே. அந்த ஆளுக்கு உடம்பு சரியில்லைன்னு காரணம். உனக்கும்தான் ஹெல்த் பிரச்சனை. தெரியுது. ஆனா நீ சொல்ல மாட்டே. ஹஸ்பன்ட், கடமை, லொட்டு லொசுக்குன்னு தத்துவ டயலாக் விடுவ. உனக்கு மட்டும் ஏதாவதுன்னா..... நோட் திஸ் வேர்ட்ஸ்... "உனக்கு மட்டும்''.. உடனே எனக்குச் சொல்லு. அடுத்த நிமிஷம் இங்க நான் இருப்பேன்.''

அதற்கு மேல் பேசவும் முடியவில்லை. இருக்கவும் விருப்பமில்லை. கிளம்பிவிட்டேன் வேதனையுடன்.

சிலநாட்களில் என் மாமா மகள் என் மனைவியானாள். மிகவும் எளிமையாகக் கோயிலில் நடந்த திருமணத்திற்கு அம்மா வந்தாள். அம்மாவுக்கு மகிழ்ச்சி. அந்த ஆளுக்கு மனமும் உடலும் சரியில்லை என்றாள்.

பின்னே அவன் போட்ட ஆட்டம் என்ன கொஞ்சமா? ஏற்கனவே மனநோயாளி அவன். கூடியிருக்கத்தானே செய்யும். அம்மா! ஸ்ட்ராங்க் அண்ட் அன்பிலீவபிள் வுமன்!

எனக்குத் திருமணம் ஆனதும் ஒரு பெண்ணுடனான உறவின் அர்த்தமும் புனிதமும் புரிந்தது. அந்த ஆளிடம் என் அம்மா எவ்வளவு கஷ்டப்பட்டிருப்பாள்? மனம் வலித்தது.

அடுத்த சில மாதங்களில் அந்த ஆள் செத்து ஒழிந்தான். நான் ஸ்பெஷல் தீபாவளி கொண்டாடினேன்! என் அம்மா இனி என்னோடு!

சாவிற்கு நான் செல்லவில்லை. அம்மாவைக் கூட்டிக்கொண்டு வரச்சென்றேன். அம்மா அந்த ஆளின் அறையில் அந்த நாற்காலியின் அருகில்! அதையே தொட்டுப் பார்த்துக்கொண்டிருந்தாள். எனக்கு ஆச்சரியம்! நான்தான் அம்மாவை புரிந்துகொள்ளாமல் ஏதேதோ கற்பனை செய்துகொண்டு விட்டேனோ?

"நான் காரியம் முடிஞ்சு.......'' அம்மா சொல்லி முடித்திருக்கவில்லை...

அந்த இரண்டு தெனாவெட்டுகளும் வந்துவிட்டன. அந்த வீட்டில் எந்தப் பொருளிலும் சொத்திலும் அம்மாவுக்கோ எனக்கோ உரிமை கிடையாது என்றும் அந்த ஆளும் அப்படித்தான் எழுதி வைத்திருக்கிறான் என்றும் நாங்கள் ஏதோ பிச்சைக்கு நிற்பதுபோல் சொல்லி வெளியில் போகச்சொல்லிக் கை காட்டின.

"இனியும் கடமை, அன்கண்டிஷனல் லவ், பொறுப்பு, கருமாதி அப்படின்னு எங்கிட்ட லெக்சர் கொடுக்காம கிளம்பு''. பல்லைக் கடித்துக்கொண்டு தழைவான குரலில் உறுமினேன். அம்மாவை இழுக்காத குறையாக இழுத்துக்கொண்டு வந்தேன்.

வீட்டிற்கு வந்ததும் எனக்கு ஆசுவாசமாக இருந்தது. இத்தனை வருடங்கள் பிரிந்திருந்த அம்மா என்னோடு. நன்றாகக் கவனித்துக்கொள்ள வேண்டும்.

முதல் வேலையாக டாக்டரிடம் அழைத்துச் சென்றேன். நான் யூகித்ததுதான். கர்ப்பப்பை இத்யாதிகள் அனைத்தும்

எடுக்கப்பட வேண்டும் என்று சொல்லப்பட்டு அறுவை சிகிச்சை.

அந்த வீட்டிலிருந்து வந்ததிலிருந்தே அந்த நாற்காலியைக் கேட்டு வாங்கிவரச் சொல்லிக்கொண்டே இருந்தாள். எனக்கு மீண்டும் அவமானப்பட விருப்பமில்லை. அந்த ஆள் ஒழிந்து இரு மாதங்களுக்கும் மேல் ஆகியிருந்த நிலையில், வீடு விற்கப்படும் செய்தியும் வர அந்த நாற்காலி போய்விடுமே என்ற கவலை என் அம்மாவிற்கு. அதை மட்டுமேனும் நினைவாகக் கொண்டுவர வேண்டும் என்ற பிடிவாதம். அம்மாவிற்குப் பக்க வாத்தியம் என் மனைவி.

“என்ன? எதுவுமே சொல்லாம கண்ணை மூடிட்டு உக்காந்திருக்கீங்க? சாமியார் மாதிரி! அப்ப போகப்போறதில்லை? அப்படித்தானே? பிடிவாதம்!.....”

சித்தியின் பேத்திகளுக்குச் சாப்பாடு கொடுத்துக் கொண்டிருந்தாள்.

மனைவியின் கேள்வி என் மனதில் அம்மா அந்த நாற்காலியைத் தடவிப்பார்த்த அந்தக் காட்சியை விரித்தது. என் மனம் ஏற்கவில்லை என்றாலும் அம்மாவிற்காக மனதைக் கல்லாக்கிக் கொண்டு விருட்டென்று எழுந்து கிளம்பிச் சென்றேன். ஏதோ சொல்ல நினைத்த என் மனைவி என்னை வியப்புடன் பார்த்தது தெரிந்தது.

என்னைப் பார்த்ததுமே அந்தத் தெனாவெட்டுகள் வந்துவிட்டன. நாற்காலி பர்மா தேக்கு விலை உசந்தது என்று என்னென்னவோ சொன்னார்கள். வீட்டைப் பார்த்து வாங்க வந்தவரைக் கை காட்டினார்கள்.

நான் தயக்கத்துடனேயே நின்றுகொண்டிருந்தேன். என்னையே பார்த்துக்கொண்டிருந்த அவர் என்னருகில் வந்தார். அவர் நான் யார் என்பதைப் புரிந்துகொண்டார் போலும். தன் பெயரைச் சொல்லி ஃபிலிம் ப்ரொட்யூஸர் என்று மட்டுமே அறிமுகம் செய்துகொண்டார்.

அம்மாவைக் காதலித்த அம்மாவின் மாமன் மகன்! நான் அவரையே ஏக்கத்துடன் உற்றுப் பார்த்தேன். கோபம் என்றால் அப்படி ஒரு வார்த்தை இருக்கிறதா என்று கேட்கும் அமைதி தவழும் அன்பான கண்கள். என் மனதில் உணர்ச்சிக் குவியல்கள். அம்மா இவருடன் வாழ்ந்திருந்தால்.....

“தம்பி”

சட்டென்று சுதாரித்துக்கொண்டு மெதுவாகத் தயக்கத்துடன் நாற்காலி பற்றிச் சொன்னதும், அவர் ஒரு நிமிடம் கண்களைச் சுருக்கி கேள்வியோடு என்னையே உற்றுப் பார்த்தார்.

அவர் மனதில் ஓடிய எண்ணங்கள் என்னவாக இருந்திருக்கும்? அந்தப் பார்வை எதையோ சொல்வது போல இருந்தது. காதல் வலியா? அல்லது சொத்தில்லை என்றான பிறகும் ஆஃபீடர் ஆல் இந்த நாற்காலியை ஏன் அம்மா கேட்கிறாள்? கணவன் மீதான அன்பின் அடையாளமாகவா?

என்னால் அடையாளப்படுத்த முடியவில்லை.

தான் பேசுவதாகச் சொல்லி என்னைப் போகச் சொல்லிவிட்டார்.

மறுநாள் மாலை வீட்டிற்கு அந்த நாற்காலி வந்தது. கூடவே ஒரு பெரிய தொகைக்கு செக். நான் அதிர்ந்துபோனேன். செக்கைத் திருப்பிவிட்டேன்.

நாற்காலி என் கண்ணில் படும்படி இருந்தால் என் கோபம் அதிகமாகும் என்று அம்மா நினைத்திருக்க வேண்டும். என் மனநிலை அறிந்தவள். என்னையோ என் மனைவியையோ கூட உதவிக்கு அழைக்காமல் அதை உடனே தன் அறைக்குள் இழுத்துச்சென்று வைத்துவிட்டாள்.

“பாருங்க அத்தையோட சென்டிமென்டல்

ஃபீலிங்க். இதுக்குத்தான் நான் உங்ககிட்ட ஒவ்வொரு வாட்டியும் அடிச்சுக்கிட்டது" தன்னை நியாயப்படுத்திக் கொள்ள என் மனைவிக்குக் கை கொடுத்த தருணம்.

அம்மாவின் அறுவைச் சிகிச்சைக்குப் பிறகு இரவில் இடையில் எழுந்து தாழில்லாமல் மூடியிருக்கும் அம்மாவின் அறைக்கதவை மெதுவாகத் திறந்து நன்றாகத் தூங்குகிறாளா என்று பார்ப்பது என் வழக்கமாக இருந்தது. அந்த வழக்கத்தில் அன்று நாற்காலி வந்த மகிழ்ச்சியில் அவள் மகிழ்ச்சியுடன் தூங்கக்கூடும் என்று நினைத்துக்கொண்டே மெல்ல எட்டிப் பார்த்த நான் அதிர்ந்துவிட்டேன்.

"....அதை ஆத்தினாலும் மனசுக்கு அடில அது குளிர்ந்து போன எரிமலை போல உக்காந்துருக்கும்டா. ஒருநாள் அது ட்ரிகர் ஆகி வெடிச்சுடும் கண்ணா."

அம்மா எனக்குச் சொன்ன வரி. அவளுள் வெடித்துக் கொண்டிருந்தது.

ஆவேசத்துடன் மூச்சிரைக்கக் கத்தியால் நாற்காலி குஷனைக் குத்திக் குதறிக்கொண்டிருந்தாள் அம்மா!

geethatpm64@gmail.com



கவிதை

**சன்மது**

இன்னொரு ஆதாம்
தொலைய மறுக்கும் புன்னகைக்குள்
நெளிந்துகொள்ளும் வண்ணம்
யாருடைய எச்சமோ மிச்சம்
கொள்ளாமல் நிறைந்த இரைப்பை
கிழிசல்களுக்கு நடுவில் மேனி
உடையாய் வளர்த்த கௌரவம்
உறங்காமல் போன நாட்கள்
எதையோ பேசியே தீர
புல் உமிழும் பனித்துளியில்
குதிகாலுக்கு கூட குளியலில்லை
எல்லா இடமும் எல்லோருக்குமாய்
நீண்டுகொள்ளும் பயணம்
பைத்தியகாரன் என்ற
இவன் பெயர்
யாருக்கு பொருந்தும்

உறங்கா வனம்
இரைகொண்ட சிங்கமென
வாய்பிளந்தது வானம்
நெட்டி முற்றிக்கும்
சிறுத்தையின் கால்களாய்
சோம்பல் முறித்த மரங்கள்
கிளைகொள்ளும் மந்தியின்
வாலெனத் தூளியானது விழுது
இரைதேடும் பாம்பாய்
நெளிந்துகொண்ட சாலை
துள்ளியெம்பும் மானென
அசைந்து கொண்டது புற்கள்
இரைதேடும் பறவையாய்
காற்றை அசைத்துக்கொண்ட
இலைகள்
கூந்தல் கொள்ளாத களிறின்
தலையாய் ஓங்கியிருந்த மலை
மெல்ல ஊரும் எறும்பென
நகர்ந்துகொள்ளும் யாமம்
சற்றென அமர்ந்த பட்டாம்பூச்சியில்
நித்திரை கலைந்தது
விலங்கென வாழ்ந்த வனம்

karthikedu17@gmail.com






# கவிதை விருது

தூரிகை அறக்கட்டளை தொடர்பாக, மகளின் இலக்கிய அறிவைப் போற்றும் வகையில், 2024 ஆம் ஆண்டுக்கான தூரிகை கவிதை விருதை அறிவிப்பதில் அன்புமிகு மகிழ்ச்சி அடைகிறோம்.

பெண் கவிஞர் / ஆண் கவிஞர் என ஒவ்வொருவருக்கும் ரூ.25,000 வீதம் ரூ.50,000 தொகையும் விருதும் வழங்கி பெருமை கொள்கிறோம்.

- சமூகப் பண்பாட்டு மாற்றத்திற்கான நவீனக் கவிதை நூல்கள் அழைக்கப்படுகின்றன.
- 2024 ல் வெளிவந்த முதல் பதிப்பாக இருக்க வேண்டும்.
- மூன்று பிரதிகள் மட்டும் தேவை
- கவிதை நூல்கள் அனுப்ப கடைசி நாள் : 20.03.2025
- முழுத்தொகுப்பு மற்றும் மொழிபெயர்ப்பைத் தவிர்க்கவும்
- நடுவர்களின் தீர்ப்பே தீர்மானமானது
- விருது விழா : 22.05.2025

புத்தகங்கள் அனுப்ப வேண்டிய அஞ்சல்

தூரிகை அறக்கட்டளை,
எச்92, திருப்பூர் குமரன் தெரு,
எம்.எம்.டி.ஏ காலனி,
அரும்பாக்கம், சென்னை - 600106
அழைப்புக்கு : 93840 21339

நிறுவனர்
**கபிலன்**
(திரைப்பாடலாசிரியர்)







கட்டுரை

அகராதி

# கூரரப்பு



இத்தொகுப்பில் உள்ள கவிதைகள் வாசிப்பதற்கு நீள்நேரம் கோருபவையல்ல. எனினும் பலவை ஆழ்ந்து பொருள்கொளத் தக்கன.

1. பார்வை விரிய சமுதாய அக்கறை கொண்ட பொதுமக்களில் ஒருவர் இடர்ப்பாடுகள் சீராகுமாவெனத் திரும்பிப் பார்க்கிறார்.

2. மனம் ஒருமித்து இசையில் ஆழ்ந்து பறக்க எத்தனிக்கும் பறவையின் கீச்சொலியையும் செவிமடுக்க இயல்கிறது.

3. பெண்ணிய நுண் உணர்வுகளைக் கொண்ட ஒருவள் சினத்துடன் சிக்கல்களை நீக்குவதெங்ஙனம் என்ற ஆற்றாமையுடன் ஆங்காங்கே சீறுகிறாள்.

"யுகங்கள் எடுத்து
உருண்டோடி வந்திருந்த
கூழாங்கற்களின்.."

என்று ஆரம்பித்து

"...ஊரின் பெயரை
ஆறு என முடித்து
நிற்க வைத்துவிட்டோம்
இல்லங்களை"

என்று முடியும் கவிதையை வாசித்து முடிக்கையில் எழுகின்ற குற்ற உணர்விலிருந்து வெளியேறுவது அத்தனை எளிதில்லை.

பொதுக் கழிப்பறைகளில் பெண்ணின் பெயரோடு எழுதப்படும் அலைபேசி எண் எத்தகைய வக்கிரம்.

“..ஓங்கிச் சாத்திய
கழிவறைக் கதவின்
கைப்பிடிக் கம்பியில்
பிசுபிசுத்துக் கிடக்கிறது
குரூரக்காரனின் ரேகைகள்
அவசரமென்று
தத்தளிக்கும் மகளை
அடுத்தடுத்த பெட்டியாகச்
சோதித்து இழுத்தலைகிறாள்
அம்மா..”

என்னும் கவிதை இக்காட்சியை முன்வைக்கையில் சினம் கொள்ளும் பெண்ணின் தீவிர ஆற்றாமையுணர்வு புலப்பட்டு, திலகபாமாவின்

“நான் தண்டவாளமாக
எப்போதும் உன் பயணம்
என்மேல்
கழிவுகளை வீசியபடி நகர
எனக்குள் ஆசை உனை
வீழ்த்திப் பார்க்க”

என்ற கவிதையை நினைக்கத் தூண்டுகிறது. கவிஞரின் சமுதாயப் பார்வை விரிந்து வருந்துகையில் வாசிப்பவருக்கும் புழுக்கம் தொற்றுகிறது.

பொறுப்புகளும் கவலைகளுமற்று சௌகரியமான இடத்திலேயே இருத்தல் என்பது சாத்தியமில்லை. சிறகுகள் பறக்கத்தான் என்று உணரும் தருணம் முன்னேற்றம் கொள்ள விரும்பும் மனித




உயிர் முயன்று நகரத் தொடங்குமென்பதைப் போன்ற பொருள் கொள்ளும் வகையில்

“தன் நிழல்
தனித்தறியாதபடி
வேரூன்றிய மரத்தின் கீழேயே
எப்போதும் நிற்றல்
ஆகுமாவென்ன”

என்று கூறியிருக்கிறார். எளிய சொற்களில் எத்தனை ஆழம் என வியக்கவைத்த வரிகள்.

சங்க காலத்திலிருந்து இயற்கையை நமது மனநிலைக்கேற்ப அழைத்து பொருளேற்றிக் கையாளுதல் இயல்பாகியிருக்கிறது. போலவே

*கனகாபாலனும் தன் எண்ணத்தின் சகாவாக இயற்கையை அருகழைத்துக்*

*'காற்றே காதலாயிரு' என்கிறார்.*

*புத்தகம் எத்தனை அறிவையும் விசாலத்தையும் தெளிவையும் பல்வேறு உணர்வுகளையும் கொடுத்துக் கொண்டிருக்கிறதென்பதை வாசிப்பவர் அறிவர். மீள்தலும் தலைக்கோதலுமளித்து வாழ்வின் மீதான நம்பிக்கையை அளித்ததை,*

"தனித்தமர்ந்து வாசிக்கையில்
கண்களில் கிச்சுகிச்சு மூட்டுவதாக
ஒரு வரி
சிரித்து வெளியேறிய கண்ணீரோடு
அடுத்தடுத்த நகருகையில்
தொண்டை அடைக்கும்படியாக
ஒரு சொல்
எல்லாம் சரியாகிவிடுமென
எளிதாக அணைத்துக்கொள்ள முடிகிறது
ஒரு புத்தகத்தை"

*என்னும் வரிகளால் வெளிப்படுத்துகிறார்.*

"புத்தகங்களைத்
திற;
அவை
உன்னைத் திறக்கும்.".
"ஒரு புத்தகம்
இருக்கும் இடத்தை
நூறு விளக்குகளால்
நிரப்ப முடியாது."

*என்னும் ஈரோடு தமிழன்பன் கவிதைகள் இங்கு நினைவுக்கூரத் தக்கன.*

*காகிதக் கப்பல் செய்து மழைநீரில் விடும் பிள்ளைப் பிராயச் செயலின் ஊடாகத் தீராத கனவினை, சாத்தியமாகாதென்றறிந்தும் விருப்பம் கொள்ளும் மனதை,*

"பெய்து ஓய்ந்து
மழைநீர்
மார்பில் ஏற்றி
மறைவாகச் சென்று
கரையொதுக்குமென அறிந்தும்
கப்பலாகிக் கொண்டேயிருந்தன
அவன் கைக்காகிதங்கள்"

*என்று முன்வைக்கையில் அசைவற்ற உடல் நினைவுகளின் கலவையால் ஓரிடத்தில் நிலைத்து தொலைநோக்கும் ஏக்கத்தின் தன்மை விழியோர நீராக நனைப்பதை உணர முடிகிறது.*

*நிகழ்ந்து முடிந்த எத்தனையோ செயல்கள் வலிகளையும் ரணங்களையும் துயரங்களையும் அவமானங்களையும் தந்திருக்க, நிகழாது போன எத்தனையோவும் மேற்கண்டவற்றை அளித்திருக்கும். அப்படியாகப்பட்ட பழையவைகளை நினைவிலிருந்து விலக்கி, விலக்கி மீள் முயற்சித்து அயர்ச்சியுற்றிருக்கும் மனதுக்கு இசை எத்தகைய இளக்கத்தையும் புத்துணர்வையும் தருகிறது என்பதை,*

"ஆயிரத்தெட்டு நூலாம்படைகளை
ஒதுக்கித் தள்ளியும்
நேற்றைய சாம்பலள்ளி
வீசியெறிவதுமாக
மலைத்துப் போயிருக்கும் மனம்
எத்தனை இதமாக இருக்கிறது

இமைகளை மூடிக்கொண்டு

மென்மையாக

இதழ்களால் தட்டச்சுவது

"விழியிலே மணி விழியிலே" "

*என்று கவிதையில் எடுத்துரைக்கிறார். பழைமைக்கு சிலந்தி வலையை எடுத்துச் சிற்சில பழைய நினைவுகளில் இருந்து தற்காலிகமாக மீண்டாலும் வலை பின்னிக்கொண்டுதான் இருக்கும் என்று சிலந்தி வலையைச் சொன்ன வரிகளை வாசிக்கையில் சிலந்தியின் முயற்சியைக் கூறும் கார்த்திக் மேத்தாவின்,*

"உள்ளங்கை

அளவான

சிலந்தியின் வலையில்

காற்று விளையாடிக்கொண்டிருந்தது

இழைகளின் துடிப்பு

என்வரை

கேட்டுக்கொண்டிருக்கிறது

எனக்குத் தெரியும்

வலைகள்

வெளியின் கண்கள்

அதன் பார்வையை நான்

ஆழமாக நேசித்தேன்

உறங்கும்போது

உள் அசையும்

கண்மணிகளின் பார்வை

அது

உள்ளங்கை அளவான

ஒளியை

உள்ளங்கை அளவான

சிலந்தியின் வலை

நெய்துகொண்டே இருக்கிறது

உள்ளங்கை அளவேயான

அதன் வெளியில்"

*என்னும் கவிதை நினைவில் வருகிறது. ஒரே சிலந்தி வலைதான் கவிஞர்களின் பார்வையில் மாற்றம் கொள்கிறது.*

"சுடு தேநீரின்

ஆவியினை

வேண்டுமென்றே

ஊதிப்பெருக்கி

அணிந்திருக்கும்

மூக்குக் கண்ணாடியினை

மங்கச் செய்து

மீளும் அழகை

இரசித்தல்

எனக்கொரு விளையாட்டு

அழவைத்துத் தேற்றும்

உனதன்புச் சீண்டலைப் போல்"

*என்னும் வரிகள் நீராவியின் படலத்தை நினைவுபடுத்துகையில் ஃபிரான்ஸிஸ் கிருபாவின்.*

"பரிமாறப்படும் காபி கோப்பையிலிருந்து

எழுந்து நடனமிடும் ஆவி

விண்ணை நோக்கி நேராய்

ஒரு கோடு கிழிக்க படும் சிரமத்தை

ருசித்ததில்லை எந்த உதடுகளும்"

*என்னும் அழகிய கவிதை, கோப்பை ஆவி நேராக நிற்கப் போராடும் முனைப்பை அறியத் தருகிறது..*

*சில கவிதைகள் முடியும் சொற்களில் போதாமை தென்படுகின்றன. உதாரணமாகப் 'பறத்தலென்பது' என்னும் கவிதையைக் குறிப்பிடலாம். ஆழ்ந்து*

சிந்திக்கும் ரசிக்கும் இயல்பு கொண்ட கனகா பாலனுக்கு ஏற்பானவையல்ல தன்னன்னா போன்ற கவிதைகள்.

ஒட்டகத்தைக் கட்டிக்கொண்டு கெட்டியாகப் பிடித்திருப்பது போல் நடைபயிற்சி மேற்கொள்ளும் வரிகளைத் தவிர்த்து ஏனையவற்றுடன் பயணிக்கலாம். ஆழ்ந்து பொருள் கொளத்தக்க பல கவிதைகளை அளிக்கும் திறன் பெற்ற நூலாசிரியர் தன்னிடம் பிறப்பு கொள்ளத் தயாராயிருக்கும் சிறந்தக் கவிதைகளைத் தொடர்ந்து நூலாக்கம் செய்து அளித்துக்கொண்டிருக்க வாழ்த்துகள்.

aharathi26@gmail.com ■



கவிதை

**கி. சரஸ்வதி**

பேரங்காடிகளில் காலி ட்ராலிகளை
ஒன்றுடனொன்று கோர்த்து
நீண்ட வரிசையாக்கி
தள்ளிச்சென்று நிறுத்துபவனின்
முகத்தில்
தவிர்க்க இயலாமல்
ஒரு புன்னகை தோன்றி
மறைகிறது

சுமைகளறியாப் பருவத்தில்
தன் வயதுப் பையன்களுடன்
ரயில் விளையாட்டு
ஆடியபோதுதான் அவன்
கடைசியாகச் சிரித்தது

ameech2004@gmail.com ■



கவிதை

**கவிஜி**

# யாருமற்ற மனம்

விதிகொண்ட கோட்டில்
வான்வெளி வளையும்
மேகம் சூடுதல்
சூட்சும தோரணை
அடுத்தடுத்த எதுவும்
கருந்துளை செய்வதாக
காலக்கிறுக்கு
பூங்கொத்தி நெளிகையில்
பாம்பொன்று நீளும் நிலவில்
சுருண்ட மனதுக்குள்
நீள்மலை றெக்கை
கண்கள் இடம்வலம் உருள
கத்திரிவெயில் வாசம்
கனவுக்குள் புரண்டு படுக்கிறேன்
யாருமற்ற மனம்
யாவுமாக
வெகு தூரத்தில்...!

chevijay80@gmail.com ■



சிறுகதை

கிருத்திகா தாஸ்

# கொலை



இன்றோர் கொலை செய்தவன் இந்நிலவினை என்னவென்று கண்டுகொண்டிருப்பான்..

“நிலவின் வெளிச்சத்தில் இருந்து ஓடி ஓடி ஒளிந்துகொள்.. பின் உணர்ந்துகொள் ஒளிந்து கொள்ளுதல் சாத்தியமற்ற ஒன்று.. நிலவறியாதது எதுவுமே இல்லை..”

“நீ மறைந்துகொள்ள முயற்சி செய்.. நீ மறைத்து வைக்க முயற்சி செய்.. நிலவற்ற நாளில் நீ மறைந்துகொள்ள வேண்டியது இருக்காது.. மீதமிருக்கும் இருள் பொழுதுகளை நிரப்பிவிட என்ன செய்வாய்.. நிலவின் மீத வெளிச்சங்களை என்ன செய்வாய்.. “

இன்று ஒரு கொலை செய்தவன் இந்நிலவினை என்னவென்று கண்டுகொண்டிருப்பான்..

அடர் வனத்துக்குள்ளும் ஒளிந்துகொள்ள இயலாது அவனால் நிலவிடம் இருந்து தப்பிக்க.. அவன் கால்நெடுக நடக்கும் வழியெங்கும் அவனது அடையாளத்தை நிலா வெளிச்சத்தில் பதித்துவிட்டபடியே செல்கிறான்.. அவன் புகைக்கும் பீடியின் புகை அவன் கைகளில் படிந்திருக்கின்ற ரத்தம் எவற்றிடம் இருந்தும் அவனால் தப்பித்துக்கொள்ள இயலாது.. எங்கோ தொலைதூரத்தில் ஒலிக்கும் சிறு சத்தத்திலிருந்து அத்தனை வேகமாய் ஓடி ஒளிந்துகொள்கிறான் அவன் நிலவுக்கடியில்.. எங்கிருந்து அழைத்து வந்ததோ இந்நிலவு இவனை..

எத்தனை முறை அவன் ஒத்திகை பார்த்திருப்பான் அந்தக் கொலை குறித்து.. எத்தனை துர்கனவுகள் விடாமல் அவனைத் துரத்திக்கொண்டிருந்திருக்கும்.. எத்தனை முறை முடிவு செய்திருப்பான்.. எத்தனை முறை மீண்டும் திட்டமிட்டு இருப்பான்..

இந்நிலவு இந்த நிலவு.. ஒரே ஒரு நிலவு.. அதில் எத்தனை கண்கள்.. எத்தனை துளிக்கண்ணீர்.. எத்தனை ஜனனம்.. எத்தனை பொய்கள்.. எத்தனை பயங்கள்.. எத்தனை கனவுகள்.. எத்தனை ரகசியங்கள்.. எத்தனை வெறுமைகள்.. எத்தனை கோபங்கள்.. எத்தனை ஆறுதல்கள்.. எத்தனை நம்பிக்கைகள்..

ம்ம்.. ஒரே ஒரு நிலவு.. அதில் எத்தனை கடைசிப் பயணங்கள்..

சிறு போர்வைக்குள் ஒளிந்திருக்கும் அவனுக்கு உலகமே அந்தப் போர்வைக்குள் முடிந்துபோகக் கூடும்.. இன்றைய நிலவு உதித்தபோது அவன் கண்ட ஒரு குழந்தையின் புன்னகைக் கையசைவு பற்றி யோசித்துப் பார்க்கிறான்.. இனி எதிர்கொள்ளப்போகும் புன்னகைகள் எதுவும் அவனை வந்தடையப் போவதில்லை..

தன் இறுதி உணவை உண்டு முடித்தவனின் உயிரைக் கையோடு கொண்டு வருகிறான்..

இந்நிலவின் இரவு அவனுக்குப் பிசாசின் இரவென்று தெரிந்துகொண்டிருக்கிறது..

கல்லறைக்குள் இருந்து குரல்கள் தொடர்ந்து அவனுக்குக் கேட்டுக்கொண்டே இருக்கின்றன.. குருதி ஒழுகும் தன் கையினை உதறிக்கொள்கிறான்..

யாருடைய கூக்குரல் இவனை அழைத்துக்கொண்டே இருக்கிறதோ..

அவனைச் சூழ்ந்திருக்கும் எப்பேர்ப்பட்ட அமைதியும் இந்த இரவினைக் கழித்திட அவனுக்கு உதவவில்லை.. இனி இந்த இரக்கமற்ற இரவு மாறப்போவதில்லை..

ஒரு உயிரைத் தின்றுவிட்ட மகிழ்ச்சியில் அவனுக்குத் தூக்கம் வரப்போவதில்லை.. இனி துளி அளவும் அவனிடம் பதற்றம் இருக்கப் போவதில்லை.. இனியவன் வாழ்வு ஒரு கணமோ ஒரு நிமிடமோ இந்த குற்றத்திலிருந்து வெளிவர அவன் நினைக்கவில்லை..

'இன்று ஒரு கொலை செய்தவன் நான்' என்ற பெருமிதத்தோடு அவனின் வாழ்வைக் கடந்துவிடுவான்..

நீதிக்கு அருகில் நின்றுகொண்டிருப்பதாய் தனக்குத்தானே நினைத்துக்கொள்கிறான்..

தன் தாயின் ரத்தத்திற்கு நன்றிக்கடன் பட்டிருப்பதாய் நினைத்துக்கொண்டான்..

தீதும் நன்றும் ஓர் இரவில் தந்து சென்றதவன் விதி..

இத்தனை அமைதியான இந்த அறைக்குள் ஒரு குரல் மட்டும் அவனுக்குக் கேட்டுக்கொண்டே இருந்தது..

கண்களில் வழிந்த கண்ணீரைத் துடைத்துக்கொள்ள மனம் வரவில்லை.. நாளைய விடியலைப் பற்றிய எந்த அக்கறையும் அவனுக்கு இல்லை..

நடப்பது நடக்கட்டும்..

அவன் அம்மா அவனுக்குப் பாடிய தாலாட்டு நினைவுக்கு வந்தது..

அறையை விட்டு வெளியே வந்து 'இன்று நான் ஒரு கொலை செய்திருக்கிறேன்' என்று கத்திக் கூறினான்.. கேட்க யாரும் இல்லை.. இந்த நிலவைத் தவிர..

தூரத்தில் நாய் ஒன்று முனகிக்கொண்டே இருந்தது.. அந்த நாய் இறுதியாகத் தன்னிடம் ஏதோ சொல்கிறது என்று உற்றுக்கேட்டான்.. அதன் குரலை..

அவனைச் சுற்றி மனிதர்கள் நடமாட்டம் இருந்துகொண்டே இருப்பதாய் தோன்றியது அவனுக்கு.. இந்தத் தனிமை அவனுக்கு தனியாக இல்லை.. அத்தனை கூக்குரல்கள் அவனைச் சுற்றி ஒலித்துக்கொண்டே இருந்தன..

அவனுக்கு அவனே வேறொரு தோற்றமாய் தெரிந்தான்.. நடந்துகொண்டே கொஞ்சம் கொஞ்சமாக இறந்துகொண்டு இருந்தான்..

இறப்புக்கு முன்னும் இறப்புக்கு பின்னும் ஒரு மாற்றமும் இருக்காதோ என்று தோன்றியது அவனுக்கு.. அப்படி அது உண்மையாகின் அந்தக் கயவனை இன்னும் நிறையச் சித்திரவதை செய்து கொன்றிருக்க வேண்டும் என்று தோன்றியது அவனுக்கு..

இவனது அமைதியைக் கொஞ்சம் வாங்கிக்கொள்ள இப்போது அவன் அருகில் யாரும் இல்லை..





மீண்டும் மீண்டும் அதே கனவு.. மீண்டும் மீண்டும் அதே குரல்.. மீண்டும் மீண்டும் அதே அழுகை கேட்டுக்கொண்டே இருந்தது அவனுக்கு..

ம்ம்.. இனி வரப்போகும் அழுகுரல் இவனை தேம்பச் செய்யாது..

"இன்று ஒரு கொலை செய்திருக்கிறேன் நான்.. கொலை"

"நடந்ததை என்னால மாற்ற முடிஞ்சா எவ்வளவு நல்லா இருக்கும்"

"ஒரு உயிர் என்னால போகப்போகுதுன்னு எனக்கு முன்னாடியே தெரிஞ்சி இருந்தா நான் என்ன செய்திருப்பேன்"

"யாராவது நேரில் பார்த்திருந்தாங்கன்னா"

"ஒரு மனுஷனுக்குள்ள தான் வெளியில சொல்ல முடியாத வேதனைகள் எத்தனை எத்தனை நிறைஞ்சு இருக்குது"

"என்னது நான் ஒருத்தனை கொலை செஞ்சிட்டனா"

"என்னை யாராவது கேள்வி கேளுங்க.. எதுக்காக இவனைக் கொன்னேன்னு என்னை யாராவது கேள்வி கேளுங்க"

"இன்னைக்கு நான் பிறந்ததற்காகவும் வாழ்ந்ததுக்காகவும் ரொம்ப பெருமைப்படுகிறேன்.. ரொம்ப பெருமைப்படுகிறேன்"

"செய்யுங்க எல்லாரும் கொலை செய்யுங்க.. இப்படி ஒரு அயோக்கியனை விட்டுடாதீங்க, கொலை செஞ்சிடுங்க"

"நடந்த அத்தனையும் என்னால மாற்ற முடிஞ்சா எவ்வளவு நல்லா இருக்கும்"

சட்டை பாக்கெட்டில் வைத்திருந்த அந்த கடிதத்தை எடுத்துப் படித்துப் பார்த்துவிட்டு மீண்டும் சட்டை பாக்கெட்டுக்குள் வைத்துக்கொண்டான்..

"இன்னும் ஒருநாள்.. இன்னும் ஒருநாள்.. என் வாழ்க்கை எனக்கு திரும்பக் கிடைச்சதுன்னா எவ்வளவு நல்லா இருக்கும்"

கையில் குத்தியிருந்த பச்சையைத் தொட்டுப் பார்த்தான்..

"எல்லாத்துக்கும் ஒரு அர்த்தம் இருக்கு.. எல்லாத்துக்கும் ஒரு அர்த்தம் இருக்கு"

"என் குழந்தை வளர்ந்து என்கிட்ட கேள்வி கேட்கும்போது நான் என்ன பதில் சொல்வேன்.. நான் என்ன பதில் சொல்வேன்.. இந்த பிசாசின் இரவைப் பற்றி நான் என்ன பதில் சொல்வேன்"

"அந்த கயவனை அடிச்சப்போ அவன் அம்மா அம்மா என்றுதானே கத்தினான்"

"நாளைக்கு காலையில எல்லாரும் என்ன பேசுவாங்க.. என்ன பேசுவாங்க"

"கல்லறைக் குரல் கேட்டுக்கிட்டே இருக்கு 'நீ ஓடி ஒளிந்துகொள் ஒளிந்துகொள்' இல்ல போகமாட்டேன்.. எங்கேயும் ஓட மாட்டேன் நான் தப்பு செய்யல, ஓடிப்போய் ஒளிந்து கொள்வதற்கு நான் தப்பே செய்யல"

"அப்போ நான் குழந்தையா இருக்கும்போது கத்துக்கிட்ட தத்துவங்கள் அத்தனையும் பொய்யா.. அத்தனையும் பொய்யா.. அதையெல்லாம் அழிச்சி மாத்தி எழுதுங்க.. அதை எல்லாம் அழிச்சி மாத்தி எழுதுங்க.. இல்ல.. ஆமா.. மாத்தி எழுதணும்.. எல்லாத்தையும்.. மாத்தி எழுதணும்"

ஓடிப்போய் வீட்டுக்குள் அழுது தவழ்ந்துகொண்டு இருந்த மூன்று மாத பெண் சிசுவை தூக்கிக்கொண்டு சுவரில் மாட்டப்பட்டிருந்த அவனது மனைவியின் படத்துக்கு முன்பு போய் நின்று.. அத்தனை அழுத்தமாகவும் அமைதியாகவும் சொன்னான்..

"முடிச்சிட்டேன் மீனாட்சி"

kritikakavithaikal@gmail.com ■



கட்டுரை

கவிதைக்காரன் இளங்கோ

# வெளிச்ச அடுக்குகளில் புலனாகும் வாழ்வு

**(திரைமொழிப் பார்வை)**

*All We Imagine as Light கவித்துவமான தலைப்போடு 2024-இல் வெளியான மலையாள மொழித் திரைப்படம். அதன் இயக்குநர், பாயல் கப்பாடியா (Payal Kapadia). 77வது கான்ஸ் திரைப்பட விழாவில் திரையிடப்பட்டு சிறந்த படத்திற்கான இரண்டாவது பெரிய பரிசான கிராண்ட் ப்ரிக்ஸ் விருதைப் பெற்றது.*

*ஒரு திரைப்படம் பார்வையாளர்களிடம் பரவலான கவனத்தைப் பெறுவதற்கு, ரசனையோடு இயைந்த பிரதான அம்சங்களும் இருக்கும். அடிப்படையில் வலுவான கதை அமைய வேண்டும். அவை பிம்பங்களாக திரையில் ஒளிர்ந்திட ஒவ்வொரு தொழில்நுட்ப கருவிக்கும் வேலையிருக்கிறது. ஆனால், அதுவொரு இயக்குநரின் பார்வையில் எவ்விதமாக உருப்பெறுகிறது என்பதைப் பொறுத்து அதன் தரம் பகுக்கப்படுகிறது.*

*பிரபா, அனு, பார்வதி எனப்படுகின்ற மூன்று பெண்களின் வாழ்க்கையைப் பிரதானப்படுத்திக் காட்டும் திரைப்படம். அவ்வாழ்க்கையின் வழியே பல கிளைத்தருணங்கள் உள்ளன. மூவருக்கும் பொதுவான வேலையிடம் ஒரு மருத்துவமனை. பார்வதி சமையல் வேலைப் பார்ப்பவள். நடுத்தரவயதுப் பெண்மணி. மகாராஷ்டிராவின் ஒரு கிராமத்தைச் சேர்ந்தவள். இருபத்தியிரண்டு வருடங்களாக மும்பை நகரவாசி. பிரபாவும் அனுவும் செவிலியர்கள். பிரபா அதில் சீனியர். இருவரும் மலையாளிகள். ஒரே அறைவாசிகள். மும்பை எனும் பரபரப்பான மெட்ரோ நெரிசலுக்கிடையே ஊடுபாவாகச் சொல்லப்பட்டிருக்கும் பிரபாவின் தனிப்பட்ட அந்தரங்கத்தில் ஓர் இருளும் அமைதியும் எப்போதுமே தனிமைச் சூழலை உருவாக்கி வைத்திருக்கிறது. அவளுடைய முகத்தில் படர்ந்திருக்கும் சோகமும் கண்களில் ததும்பும் ஏக்கமும் நம்மை மனச் சலனத்துடன் ஈர்க்கிறது.*

பிரபாவின் கணவன் ஜெர்மனியில் எங்கோ இருக்கிறான். சொந்த ஊரில் அவசரமாக ஏற்பாடாகி நடந்த திருமண வாழ்க்கை அவளுக்கு குறுகிய காலத்திலேயே தொடராமல் நின்றுவிடுகிறது. வேலை நிமித்தம், தொலைவு இருவருக்கும் நடுவே பிரிவை ஏற்படுத்தி வைத்திருக்கிறது. பிறகு மெல்ல மெல்ல கணவனிடமிருந்து தொடர்பே இல்லாமல் ஆகிவிட்டிருக்கிறது. ஒருநாள் அவளுடைய மும்பை முகவரிக்கு அனுப்பியவர் பெயர் குறிப்பிடப்படாமல் ஒரு ஜெர்மன் மேக் குக்கர் பார்சலில் வந்துசேர்கிறது. அதை வைத்துக்கொண்டு என்ன செய்வதென்று பிரபாவுக்குத் தெரியவில்லை. பின்னிரவில் ஒருநாள் ஈரமாகிவிட்ட தரையைக் குத்துக்காலிட்டு துடைத்துக்கொண்டிருக்கும் பிரபா அந்தக் குக்கரை வெளியே இழுத்து அதை அப்படியே தன் மார்புகள் அழுந்த தன்னோடு சேர்த்து அணைத்துக் கொள்கிறாள். சொற்ப நாட்கள் மட்டுமே காமம் பழகிய உடலும் மனமும் ஒன்று இன்னொன்றைப் பற்றிக்கொண்டு அவளுக்குள்ளே ஓர் உளவியல் போராட்டத்தை நடத்துகின்றன. மழைக்கால இரவும் குளிர் காற்றும் அவளுடைய தூக்கத்தை இரக்கமேயில்லாது பறித்துக்கொள்கிறது. தன் உணர்வைப் பகிர்ந்துகொள்ள வேறு யாரும் இல்லை.

அனு, அவளுடைய இளவயதின் துடிப்போடும் காதல் கனவுகளோடும் இருப்பவள். அவளுக்கு சம்பாத்தியம் போதவில்லை. செலவாளியாக இருக்கிறாள். பிரபா சேச்சியின் நேர்மையும் கண்டிப்பும் பல சமயங்களில் அவளைக் கட்டுப்படுத்த முடியாமல் போகும்போது அனுவின் பொய்சொன்ன மனம் குழந்தைத்தனமான அப்பாவி முகத்தில் அப்பட்டமாக வெளிப்படுகிறது. அனுவுக்கு பிரபா சேச்சியின் மீது அன்பும் மரியாதையும் சமவிகிதத்தில் கலந்திருக்கிறது. நள்ளிரவுகளில் ஆழ்ந்து



தூங்கும் அனுவின் உடைகள் விலகிக் கிடக்கும்போது அவளுடைய யௌவனமான உடலின் வனப்பை ஒருகணம் கண்டு மறுகணம் அவளுடைய உடையைச் சரிசெய்து பிரபா அங்கிருந்து நகர்ந்துவிடுகிறாள்.

தன் இயல்பான வெகுளித்தனமும் வீட்டுச்சூழல் அழுத்தும்போது ஏற்படும் விரக்தி முகபாவமும் என இரண்டுமாக அனு, தன்னுடைய அன்றாடத்தைத் தாண்டிக் கொண்டிருக்கிறாள். அவளுக்கு ஓர் இஸ்லாமிய இளைஞனுடன் பழக்கம் இருக்கிறது. டியூட்டி முடிந்ததும் நேரே அவனைச் சந்திக்கக் கிளம்பிவிடுகிறாள். அவனுடைய பெயர் ஷியாஸ். ஷியாஸின் வயதும் அப்பாவித்தனமும் அவளுக்குப் பிடித்திருக்கிறது. அவனுடனான பழக்கம் ஏற்கனவே காதலாகப் பரிணமித்திருக்கிறது. கிடைக்கும் தனிமைச் சந்தர்ப்பங்களில் இருவரின் உடல் நெருக்கமும் முழுமைப் பெறாத காமத்தேவையும் பரஸ்பரம் பரிமாற்றம் ஆகிறது.

அனுவுக்கு மழையில் நனைவது எப்போதுமே பிடித்தமான விஷயம். மும்பையின் மழைக்காலம் தன் உடல் கிளர்த்தும் மனச்சூட்டை தணிக்க உதவுவதைப் போலவே அவள் நடந்துகொள்ளும் விதம் இருக்கிறது. அவள் மழையைப் பொருட்படுத்துகிறாள். மாறாக பிறரைப்போல ஓடி ஒதுங்குவதில்லை. மழையின் விரல்நுனிகள் அவளுடைய மேனியைத் தீண்டித் துளைத்துவிட அனுமதிக்கிறாள். அதனை முழுமையாக அனுபவிக்கிறாள். அறைக்குத் திரும்பியதும் பிரபாவின் முன்னால் எவ்வித லஜ்ஜையும் இல்லாமல் வெகு இயல்பாக உடைகளைக் களைந்து மாற்றுடைகளை அணிந்துகொள்கிறாள்.

இப்படிச் சின்னச்சின்ன விஷயங்களைக் காட்சிகளாக்கி இருக்கிறார் இயக்குநர். அவை திரையில் தோன்றும் வாழ்வின் பன்முகத்தன்மையை இன்னும் பொறுமையாக மனத்தால் நெருங்கி அணுக நமக்கு ஒரு திறப்பை ஏற்படுத்துகிறது.

இன்னொரு மலையாளியான டாக்டர் மனோஜூக்கு பிரபாவின் மீது காதல் உண்டாகிறது. பிரபாவுக்கும் மனோஜை மனத்தளவில் பிடித்திருந்தாலும் தன்னுடைய திருமண பந்தத்தின் நிச்சயமற்ற போக்கினால் ஏற்கனவே தடுமாற்றம் கொண்டிருக்கிறாள். மனோஜின் தயக்கமான அணுகுமுறையை ரகசியமாக ரசித்துக்கொள்ள முடிந்தாலும் என்றாவது ஒருநாள் காதலை வெளிப்படுத்திவிடுவானோ என்னும் அச்சமும் அவளிடம் இருக்கிறது. நினைத்தது போலவே, மனோஜ் ஒருநாள் தன் விருப்பத்தை நாசூக்காக வெளிப்படுத்தும்போது 'எனக்கு கல்யாணம் ஆகிவிட்டது' என்று சொல்லிவிட்டுப் போய்விடுகிறாள்.

பிரபாவின் பெரிய கண்களைப் பார்க்கையில் அப்பார்வையைக் கொண்டு எவராலும் எதையும் அனுமானிக்க முடியாது. பணியிடத்தில் அவளிடம் அமைதி கலந்த ஒரு கண்டிப்பு இருக்கிறது. புதிதாக வேலையில் சேர்ந்திருக்கும் இளம் செவிலியர்களுக்கு பிரபா கறாரான அதேவேளை அணுக்கமான ஒரு வழிகாட்டியாக இருக்கிறாள்.

அனுவைப் பற்றிய வதந்திகள் பிரபாவின் காதுக்கு வந்துசேரும் போது அதை அவள் மறுத்துவிட்டு நகர்கிறாள். அது உண்மை எனத் தெரிய வரும்போது அனுவிடம் கடுமையான முகத்தைக் காட்டுகிறாள்.

சமூக நிர்ப்பந்தத்தினால் உருவாகும் நடைமுறைக் காரணங்களோடு அந்நியர்களை ஏதோவொரு உறவுமுறைக்குள் அனுமதிக்கையில் ஏற்படும் உளவியல் சிக்கல்களுக்கு கச்சிதமான தீர்வுகள் கிடையாது. ஆனால்,

சூழலுக்கேற்ப முடிவெடுத்தல்கள் உண்டு. அவை தன்நிலையானவையாக அமையும் இடத்தில்தான் மனிதன் தடுமாற்றம் கொள்கிறான். உடனிருப்பவரின் நலன்கருதி தேங்கிவிட நேரும் மணிநேரங்கள்தாம் சவாலானவை. அதில் இருந்திருக்க வேண்டிய பரஸ்பர மதிப்பின் வித்தியாசத்தில் அனுமானங்கள் சிதையும்போது உறவின் விரிசல் தொடங்குகிறது. வெளிப்படைத் தன்மைகள் இல்லாத இடங்களில் அல்லது அவை குறைகின்ற இடங்களில் அந்த விரிசல் தொடங்கிவிட்டிருக்கும். இதெல்லாம் திரண்டு ஒரு சந்தர்ப்பமாகவோ சூழ்நிலைச் சம்பவமாகவோ கண்முன்னே எழும்போது அதனை எதிர்க்கொள்ளும் திராணி நமக்கு இருக்கிறதா இல்லையா என்பது அப்பட்டமாகத் தெரிந்துவிடும்.

இந்த விஷயங்கள் இத்திரைப்படத்தில் பிரபாவுக்கு, அனுவுக்கு, பார்வதிக்கு என மூன்று பிரதானக் கதாபாத்திரங்களுக்கும் நடக்கிறது. துணைக் கதாபாத்திரங்களான டாக்டர் மனோஜூக்கும் ஷியாஸூக்கும் கூட நடக்கிறது. ஒட்டுமொத்தமாக இவர்கள் யாவரும் தங்களுக்குள்ளாகவே நேரிடையாகவோ மறைமுகமாகவோ அவரவரின் தனிப்பட்ட முடிவெடுத்தல்களுக்கான காரணிகளாக மற்றவர்களுக்கு இருக்கிறார்கள். இதைத்தான் இத்திரைப்படத்தின் திரைக்கதை திறமையாகக் கையாண்டிருக்கும் ஒரு தோற்றத்தை நமக்கு ஏற்படுத்துகிறது. அத்தோற்றத்தை நாம் உணர்ந்து கண்டுகொள்ள வெறுமனே கண்முன்னே காட்சிகளாக நகர்ந்துகொண்டிருக்கும் அர்த்தங்களின் மேலோட்டத்தில் கிடைப்பதில்லை. இன்னும் கொஞ்சம் ஆழ்ந்து அவதானித்துக்கொள்ளும்படி பின்னப்பட்டுள்ளது. அதற்கேதுவாக ஒளிப்பதிவு, அதன் வெளிச்ச அமைப்பு, மற்றும் கேமராவின் நகர்வு உதவுகிறது. காட்சிகளை எடிட் செய்து கோத்திருந்த நேர்த்தியில் திரைக்கதையின் போக்கை உள்வாங்கிக்கொள்ள முடிகிறது. இவற்றை மேம்படுத்திக்கொள்ள பின்னணி இசை துணைபுரிகிறது. இவையனைத்தும் ஒருங்கிணைந்து கிடைத்திருக்கும் காட்சி சட்டகங்களில் இயக்குநருக்கு தன் கதையமைப்புக்கான பொறுப்பு கூடியிருப்பதையும் பார்க்க முடிகிறது.

மும்பை நகரின் பரபரப்பை உயிர்ப்போடு படம்பிடித்திருக்கும் வகைமைகளில் ஒன்று டாக்குமென்ட்ரி பாணியாகும். ஒரு சிறு பயணத்தின் வழியே காட்டப்படும் காட்சி நகர்வுகளில் மும்பை நகரின் இரவுநேர யதார்த்த வாழ்க்கை படம்பிடிக்கப்பட்டிருந்தாலும் அதன்மீது கதாபாத்திரத்தின் வசனம் ஒலிக்கும்போது அது இந்த கதைக்கான அபிப்பிராயமாக சுவீகரிக்கப்பட்டுவிடுகிறது. ஷியாஸூம் அனுவும் ஊர்ச்சுற்றும் காட்சிகள் அந்த பாணிக்கு பயன்படுகின்றன. ஷியாஸ் ஓரிடத்தில் சொல்கிறான். *'என் கிராமத்தில் இந்த நேரத்தில் ஊரே இருட்டுக்குள் மூழ்கி உறங்கச் சென்றுவிடும். இங்கே இப்போதுதான் இந்நகரின் பகல்வேளைத் தொடங்குவதைப் போல் இருக்கு. அதனால் எனக்கிது ரொம்பவும் பிடித்திருக்கிறது'.* மும்பை நகரின் டாக்குமென்ட்ரி அல்ல இக்காட்சிகள் என நம்மை உணர வைப்பதற்கு இன்னொரு உத்தியிலும் படம் பிடிக்கப்பட்டுள்ளது.

அனு டியூட்டி முடிந்து மருத்துவமனையிலிருந்து வெளியேறி அவளுக்குப் பழக்கப்பட்ட வழியில் மக்களிடையே புகுந்து ஜனக்கூட்டத்தில் ஒருத்தியாக போய்க்கொண்டே இருக்கிறாள். அதை காருக்குள்ளிருந்தும் உயரமான கட்டடங்களிலிருந்தும் வெவ்வேறு கோணங்களில் படம்பிடித்து கோத்திருக்கிறார்கள். பல இடங்களைக் கடந்து ஒரு சிக்னலைக் கடப்பதற்காக அவள் நிற்கும்போது அவளருகே வந்து



யாரோ போல் இயல்பாக நிற்கும் ஷியாஸ் அதே இயல்போடு அவளுடைய இடக்கையை தன் கையோடு கோர்த்துக்கொள்கிறான். இருவரும் இணைந்தபடி சாலையைக் கடந்து மறுபுறம் போகிறார்கள். சிக்னலில் அதுவொரு சிறிய காத்திருப்பு நொடிகள்தாம். நடிகர்களாக இருவரும் அதனைக் கச்சிதமாக நிறைவேற்றி இருக்கிறார்கள். அக்காட்சியை உயரமான ஓரிடத்திலிருந்து படம்பிடித்திருப்பதால் அதுவொரு படப்பிடிப்பு காட்சி என்பது சாலைகளில் புழங்கும் பொதுமக்களுக்குத் தெரியாது. ஒருவேளை அக்காட்சி இன்னொரு டேக் தேவைப்பட்டிருக்கும் பட்சத்தில், இதுபோன்ற சமயங்களில்தான் சினிமா வேலை சுவாரசியம் மிகுந்ததாகவும் ஆகிறது.

இப்படிப் பொது இடங்களை சினிமாவுக்காக *Candid Photography* பாணியில் திரைக்கதைக்கான ஓர் உத்தியாக பாவித்து படம்பிடிக்கும் இயக்குநர்களுக்கு அது சவாலான விஷயமாக இருக்கும். சமூகத்தின் பொதுவாழ்க்கையை, சூழ்நிலையை, பருவநிலை என அனைத்தும் கலந்து கிடக்கிற தருணத்தை தனக்குரிய ஒரு முடிவான சட்டகமாக மாற்றிக்கொள்வது லேசுபட்ட காரியமல்ல. இதை சினிமா குறித்த வகுப்பறை பாடங்களால் கற்றுக்கொடுக்க முடியாது. இவற்றையெல்லாம் ஓரளவிற்காவது உள்வாங்கிக்கொள்ள முடிகின்ற தொழில்முறை நடிகர்களால் மட்டுமே காலத்தை உணர்ந்து படப்பிடிப்பின் தேவையைக் கருதி தம் நடிப்பாற்றலை வழங்க முடியும்.

இத்திரைப்படத்தில் நடிகர்கள் உள்ளீடாகாத காட்சி சட்டகங்களில் ஒரு *Irregular composition* இருக்கிறது. அதுவே டாக்குமென்ட்ரி பாணியை வெளிப்படுத்துகிறது. அதனை கதாபாத்திர வசனங்களின் ஒலி ஈடுசெய்து திரைக்கதையாக்குகிறது. போலவே, நடிகர்கள் உள்ளடங்கிய காட்சி சட்டகங்களில் அது அசைவுள்ளதாக இருந்தாலும் அசைவற்றதாக இருந்தாலும் கம்போஸிஷனில் ஒரு கச்சிதத்தன்மை உள்ளது. துல்லியமாக எழுதப்பட்டிருக்கும் திரைக்கதைக்கு *Candid Photography* பாணியில் இதனை ஒரு தீர்க்கத்துடன் வரையறுத்துக்கொள்ள முடிகின்ற இயக்குநரும் ஒளிப்பதிவாளரும் தங்களின் உழைப்பினால் முழுமையாகப் பங்காற்றியவர்கள் எனும் வகைமைக்குள் வந்துவிடுகிறார்கள்.

**பா**ர்வதியின் குடியிருப்பு பிரச்சனை முற்றிப்போனதில் தனக்கான நியாயம் கிடைக்காத நிலையில் சொந்த ஊருக்கே கிளம்பிவிடலாம் என்னும் முடிவுக்கு வருகிறாள். அவளுக்குத் துணையாக பிரபாவும் அனுவும் பார்வதியின் உடமைகளைச் சுமந்துகொண்டு பேருந்தில்

பயணிக்கிறார்கள். பார்வதியின் ஊர் மகாராஷ்டிரா மாநிலத்தில் ஒரு கடற்புற கிராமத்தில் இருக்கிறது. மூவருமே வெவ்வேறு வகையில் ஏதோவொரு கட்டுப்பாட்டிலிருந்து தங்களின் சுயம் விடுதலை பெற்ற உணர்வுக்கு ஆளாகிறார்கள். அதுவரையில் இருந்த, புலப்படாத ஓர் அழுத்தம் நீங்கிய மனநிலை.

அனு, ஷியாஸை யாரும் அறியாமல் அவர்களைப் பின்தொடர்ந்து வரும்படி வரவழைத்திருக்கிறாள். பிரபாவுக்குத் தெரியாமல் அனு ஷியாஸை போய் சந்தித்துக்கிறாள். அதுவரை கிட்டியிராத அத்தனிமை காதலும் காமமுமாக உடலளவிலும் ஒன்றென கலந்திட இருவருக்கும் ஏதுவாகிறது.

**மீ**ன்வலையில் சிக்கி கடற்கரையில் ஒதுங்கிவிட்ட ஓர் ஆணின் உடலை மக்கள் கூட்டமாகச் சுற்றி நின்று செய்வதறியாமல் வேடிக்கைப் பார்க்கிறார்கள். ஆசாமி இறந்துவிட்டான் என்று முடிவுக்கு வரும் நிலையில் அங்கு போய்ச்சேரும் பிரபா அந்த ஆளுக்கு CPR செய்து உயிரை மீட்கிறாள். அனைவரும் அதிசயித்துப் போகிறார்கள். லோக்கல் மருத்துவச்சாலைக்கு தூக்கிச் செல்லப்படும் அவனை பிரபா அருகிருந்து கவனித்துக்கொள்கிறாள். அரை மயக்கத்தில் கிடக்கும் அவனுடைய வெற்று மேலுடலில் ஒட்டியிருக்கும் மணற்துகள்களை ஈரத்துணியால் துடைத்தெடுக்கிறாள். அப்போது, அவள் தானொரு பெண்ணாகவும் செவிலியாகவும் மனத்தால் அல்லாடுவதை உணருகிறாள். மனத் தடுமாற்றத்தில் இருக்கும்போதே அவன் கண்விழித்துவிடுகிறான். ஆனால், தான் யார் என்னும் விபரங்களை மறந்துவிட்டிருக்கிறான். பிரபாவை யாரென அறியாத மருத்துவச்சாலையின் செவிலி ஒரு மூதாட்டி. அவர், அவர்கள் இருவரையும் கணவன் மனைவி என்று நினைத்துவிடுகிறார். குழப்பத்தில் ஆழ்ந்திருக்கும் அம்மனிதனை பிரபா தன்னுடைய கணவனாகப் பாவித்து அவனோடு உரையாடுகிறாள். தன் உள்ளக் கிடக்கைகளை அவனிடம் கேள்வியாகக் கேட்கிறாள். அவன் அவளுடைய கணவனாகவே பதிலும் சொல்லுகிறான். அவர்கள் இருவரின் உரையாடலில் வெளிப்படும் விஷயம் இருள் மற்றும் வெளிச்சம் குறித்தது.

*‘வெளிச்சத்தால் கண்கள் குருடாகிவிடும்போது இருட்டுக்குள்ளிருந்து வெளிச்சத்தை உன்னால் கற்பனை பண்ண முடியாது. அப்போது உன்னைப் பற்றி நினைத்துக்கொள்ளுவேன். உன் பக்கத்தில் இதே மாதிரி உட்கார்ந்திருப்பதாக நினைத்திருக்கிறேன். கை நீட்டி உன்னை தொட்டுவிட முயற்சித்திருக்கிறேன்’*

குறிப்பாக, அவன் தன் வேலையிடத்தைப் பற்றியும் தன் நிலைமையின் அவலத்தைப் பற்றியும் அந்த அவலத்தின் இருளுக்குள் இருந்து அவளை நினைத்துக்கொள்ள முயன்றதையும் சொல்லுகிறான்.

*‘இதை ஏன் என்னிடம் இதற்கு முன்பு சொல்லவில்லை?’* என பிரபா கேட்கிறாள்.

‘பிரபா! என்னுடன் வந்துவிடு. இம்முறை முற்றிலும் வித்தியாசமாக நம் வாழ்க்கை இருக்கும்’ என்று பதில் சொல்லிவிட்டு அவன், அவளைத் தொட்டு பரிவுடன் முத்தங்களிடுகிறான். அந்த உரையாடல் பிரபாவை ஆசுவாசப்படுத்துகிறது. ஆனால், பிரபா அவனை ஓர் எல்லைவரையில் அனுமதித்துவிட்டு பின் நிறுத்துகிறாள்.

*‘எனக்கு உன்னை இனியெப்போதும் பார்க்க வேண்டாம்’* என்கிறாள்.

அந்த வசனத்தைத் தொடர்ந்து, திரையில் கடற்கரையின் இருளும் வானும்

தொலைவில் மசமசப்பாகக் காட்டப்படுகிறது. அதன்மீது அலையோசை கேட்டுக்கொண்டிருக்கிறது. நீண்ட அமைதிக்குப் பிறகான அடுத்த ஷாட்டில், பிரபா கரையில் நின்றபடி கடலையே வெறித்துப் பார்த்திருக்கிறாள். அவனுக்கும் பிரபாவுக்கும் நடுவே காட்சிப்படுத்தப்பட்ட விதம் ஒரு சர்ரியலிஸத் தன்மையோடு படம்பிடிக்கப்பட்டுள்ளது. அதாவது, தொழில்நுட்பமாக அல்லாமல் அக்காட்சியை எழுதிய விதம் அப்படி இருக்கிறது. சர்ரியலிஸம் என்பது அடிமன இயல்பின் விகசிப்பு. அதனுள் பொதிந்திருந்து வெளிப்படும் கூறுகள் முற்றிலும் கற்பனையாக இருப்பதில்லை. அசலுக்கு மிக அருகில் தோற்றம் கொள்ளும் வித்தியாசத்தில் ஏற்படும் ஒருவித புத்தி மயக்கம்தான் அது.

முகத்தில் அரும்பியிருக்கும் சிறிய புன்னகையோடு நின்றுகொண்டிருக்கும் பிரபாவின் அருகே வரும் அனு, பிரபாவின் வலது தோளில் படிந்திருக்கும் மணலைத் தட்டிவிடுகிறாள். அப்போதும் மாறாத அதே மெல்லிய புன்னகை. அதில் ஏதோ ஒரு சிறு நிறைவு. அல்லது அர்த்தமின்மையின் ஆழத்தில் காணக்கிடைத்த பிரியத்தின் சிறு மணல் துகள்களைப் போன்ற ஒரு நிம்மதி. பிரபா அனுவிடம் அவளுடைய பாய்ஃபிரண்டை வரச்சொல்லும்படி தகவல் சொல்லச் சொல்லுகிறாள். ஆனால், இம்முறை பிரபாவின் குரலில் இருக்கும் வழக்கமான கண்டிப்பு இல்லை. அனுவுக்கு ஆச்சரியமும் அச்சமும் கலந்திருக்கிறது. பிரபா சேச்சிக்கு எப்படியோ விஷயம் தெரிந்துவிட்டது. ஆனால், ஷியாஸை வரச்செய்து என்ன செய்யப் போகிறாளோ என்னும் கலக்கமும் அவளுடைய முகத்தில் இருக்கிறது.

ஷியாஸ் வந்ததும் அவனை பிரபாவுக்கும் பார்வதிக்கும் அறிமுகப்படுத்துகிறாள். பிரபா அவனைப் புன்முறுவலுடன் அங்கீகரிக்கிறாள். அவனுடைய ஊரைப் பற்றிக் கேட்கிறாள். அவன் சொல்லுகிறான். ‘நான் அங்கு ஒருமுறை வந்திருக்கிறேன். ரொம்ப அழகான ஊர்..’ என்று சொல்லிவிட்டு ‘இந்த ஊரும் கூட..’ என்கிறாள். அப்போது அவன் கொஞ்சம் இயல்பாகிறான்.

**மூ**ன்று பெண்களும் அந்த இளைஞனும் கடற்கரையில் இருக்கும் சிறிய உணவுக்கூடத்தின் முன்னே நாற்காலிகளில் உட்கார்ந்தபடி உரையாடிக் கொண்டிருக்கிறார்கள். அக்கடையில் சரவிளக்குகள் அலங்கரிக்கப்பட்டு எரிந்துகொண்டிருக்கிறது. அதன் சொற்ப வெளிச்சத்தில் அவர்கள் உட்கார்ந்திருக்கிறார்கள். கடைப்பையனான சிறுவன் எப்போதும் காதுகளில் இயர்ஃபோன் மாட்டிக்கொண்டு அவனுக்குப் பிடித்த பாடல்களை அவன் மட்டுமே கேட்டுக்கொண்டும் நடனமிட்டபடியும் கடை வேலைகளைச் செய்துகொண்டே இருக்கிறான். ஆனால் அவன் வேறொரு தனி உலகத்தில் சஞ்சரித்திருக்கிறான். இவர்களின் உலகில் அவன் இல்லை. ஆனால், சம்பந்தப்பட்டிருப்பதைத் தடுக்க முடியாது.

இறுதி லாங் ஷாட்டில், அந்தக் கடையோடு சேர்ந்து இரவு வானமும் ஒரு கம்போஸிஷனில் காட்டப்படுகிறது. நட்சத்திரங்கள் பிரகாசமாக ஒளிர்ந்துகொண்டிருக்கின்றன.

**எ**ந்தவொரு பருப்பொருளும் நம் கண்களுக்குப் புலப்பட வெளிச்சம் அவசியம். வெளிச்சத்தை விட மிகவும் பிரம்மாண்டமானதாக இருள் இருக்கிறது. அது எங்கும் வியாபித்துக் கிடக்கிறது. வெளிச்சம்தான் இவ்வுலகை அடையாளப்படுத்துகிறது. சொற்ப வெளிச்சமேயானாலும் அது, எதன்மீது






பட்டாலும் அதைக் காட்டிவிடும். நாம், நம் சக மனிதர்களை அவர்களின் உருவ அமைப்புகளை வைத்தும் பெயர்களை வைத்தும் நாமாக முடிவு செய்துகொள்ளுகிற உறவுநிலைகளை வைத்தும் அடையாளம் கண்டுகொள்கிறோம். அதற்கான தொடக்கம் வெளிச்சம் மட்டுமே. *Photography* என்பதே *graphing the Light* என்பதன் சுருக்கம்தான். அதில் புலப்படும் உருவம்தான் *Image*. கற்பனித்தல் அல்லது கற்பிதப்படுத்திக் கொள்ளுதல் எனும் மனித சுபாவம் எத்தனையோ விஷயங்களை உணர்வுப்பூர்வமான சொத்தாகப் பத்திரப்படுத்தி வைத்துக்கொள்ளுகிறது. தம்மைத்தாமே சுதந்திரப்படுத்திக் கொள்ளாமல் போக நேரும் எண்ணங்கள் மனவலிமையை சிறைப்பிடித்து வைத்துச் சொந்தம் கொண்டாடுகிறது. அல்லது, அடிமைப்படுத்திவிடுகிறது. அதிலிருந்து தன்னைப் பிரித்தெடுத்து விடுவித்துக் கொள்வது சவாலான ஒன்றென ஆகும்போது நாம் வேண்டும் ஆசுவாசம் லேசில் கிடைப்பதில்லை.

நோய்ப்பட்ட மனித உடல்களை, மன அசௌகரியம் உள்ளவர்களின் புலம்பல்களை, முதியவர்களின் அடம்பிடித்தல்களை, உளவியல்ரீதியில் உருவாகும் மாயத்தோற்ற அச்சத்தை என அனைத்துவிதமான அகபுற மனித அமைப்புகளுடன் தங்களின் அன்றாடத்தைப் புழங்கும் பிரபாவுக்கும் அனுவுக்கும் யதார்த்த உலகு என்பது கண்ணோட்ட அளவில் முற்றிலும் புதிய கோணத்தில் இருக்க வாய்ப்புண்டு.

இருபது வருடங்களுக்கும் மேலாக மும்பை நகரில் வாழ்க்கை நடத்திவிட்ட பார்வதி, முறையான அரசாங்க அடையாளம் இல்லாததால் அந்த இடத்தைவிட்டு வெளியேற்றப்படுகிற நிர்ப்பந்தத்திற்கு ஆளாகிறாள். கடுமையாக எதிர்த்து சண்டையிட்டுப் பார்த்தும் சட்டரீதியான வலுவான உதவியோ சரியான துணையோ இல்லாமல், கடைசியில் விட்டுக்கொடுத்து விட்டு சொந்த ஊருக்கே திரும்பிவிடுகிறாள். அவளுக்கு ஓர் ஆசுவாசம் கிடைக்கிறது. அதுவேதான் பிரபாவுக்கும், அனுவுக்கும் ஷியாஸூக்கும்.

இப்பிரபஞ்ச கணக்குப்படி நமக்கான வெளிச்சம் நம்மீது பாய்ச்சப்படுவதற்கான முக்கியத்துவம் இருளில் உள்ளது. ஆனால், மனித மனத்தின் புதிர் நிறைந்த இருப்பின் இருளை விளங்கிக்கொள்வது அரிது. அதனை நாம் முயன்று கற்பனை செய்வதன் மூலம் இவ்வாழ்வின் பலதரப்பட்ட அடுக்கில் தோற்றப்பிழைகள் எழுவதைத் தவிர்க்க முடியாது.

elangomib@gmail.com ■



# ‘க.நா.சு’ என்கிற ஓர் இலக்கிய சகாப்தம்

க.நா. சுப்ரமனியயணை நான் முதன்முதலில் சந்தித்தது சிதம்பரத்தில். 1950ல். அப்பொழுது நான் அண்ணாமலைப் பல்கலைக்கழகத்தில் படித்துக்கொண்டிருந்தேன். அவர் பல்கலைக்கழக வளாகத்தையொட்டி சிதம்பரத்தில் ஒரு புத்தகக்கடை வைத்திருந்தார்.

என்னை, என்னுடன் பல்கலைக்கழகத்தில் படித்துக்கொண்டிருந்த டி.கே. துரைஸ்வாமி (அப்பொழுது அவர் ‘நகுலனா’க ஆகியிருக்கவில்லை நானும் ‘இந்திரா பார்த்தசாரதி’யாக ஆகவில்லை) க.நா.சுவைப் பார்க்க அழைத்துக்கொண்டு போனார்..

க,நா.சுவைப் பற்றி நான் அதற்குமுன் அவரைப் பற்றிக் கேள்விப்பட்டிருந்தேனே தவிர அவரை நேரில் பார்த்ததில்லை. ‘கல்கி’ ஆரம்பமான புதிதில் ஒரு சிறுகதைப் போட்டிக்கு அவர் ராஜாஜியுடன் நடுவராக இருந்தார். அச்சிறுகதைப் போட்டியில் முதல் பரிசு பெற்ற கும்பகோணத்துக்காரராகிய கி.ரா. கோபாலன் க.நா.சு மிகவும் படித்தவர் என்று என் அண்ணணிடம் சொல்லிக் கேட்டிருக்கிறென். நான் அப்பொழுது பள்ளிக்கூடத்தில் படித்துக்கொண்டிருந்தபடியால், ‘மிகவும் படித்தவர்’ என்பதன் முழு அர்த்தத்தையும் என்னால் வாங்கிக்கொள்ள முடியவில்லை.

அடர்த்தியான தலைமுடி. முகத்தில் ‘ஸினிஸிஸம்’ நிழலிடுவது போல் தோன்றும் புன்னகையின் கீற்று. நான் அவரைச் சிதம்பரத்தில் அந்தப் புத்தகக் கடையில் பார்த்தபோது அவர் தோற்றம் எப்படியிருந்ததோ அதே மாதிரிதான் பிறகு அவரை நான் போன நூற்றாண்டு அறுபதின் பிற்பகுதிகளில் தில்லியில் சந்தித்த போதுமிருந்தது. சிலரைப் பற்றி நம் மனத்தில் உருவாகியிருக்கும் பிம்பம் எப்பொழுதுமே மாறுவதில்லை. நாம் அவரை அப்படித்தான் காண விரும்புகின்றோம் என்பதும் காரணமாக இருக்கலாம்.

துரைஸ்வாமி அவரிடம், ‘இவரும் என்மாதிரி தமிழ் எம்.ஏ சேர்ந்திருக்கார்’ என்று கூறிவிட்டுச் சிரித்தார். துரைஸ்வாமியின் சிரிப்புக்குப் பொருள் காண்பது பெரிய சவால்.

‘நீங்க கும்பகோணத்துக்காரர் என்றார் துரைசாமி’ என்று கூறிவிட்டுப் புன்னகை செய்தார் க.நா.சு. அது வெறும் ‘ஸ்டேட்மென்டா’ அல்லது விமர்சனமா என்று எனக்குப் புரியவில்லை.

நான் புத்தகக் கடையைச் சுற்றிப் பார்க்கத் தொடங்கினேன்.

பெரும்பாலும் ஆங்கில நாவல்கள் - ஹெமிங்வே, ஸ்டெயின்பெக், வர்ஜினியா வுல்ஃப், ஹென்ரி ஜேம்ஸ்... பிறகு கவிதைப் புத்தகங்கள். எலியட், ப்ரௌஸ்ட், ஸ்டீஃபன் பெண்டர், ஆடன். இதைத்தவிர, ‘மணிக்கொடி’ எழுத்தாளர்களின் தமிழ்ப் படைப்புக்கள், வங்க மொழி நாவல்களின் தமிழ் ஆக்கங்கள்,

சிதம்பரத்தில் இவற்றின் வாசகர்கள் யாராக இருக்க முடியுமென்று எனக்குப் புரியவில்லை.

அப்பொழுது கையில் ஒரு டென்னிஸ் ராக்கெட்டுடன் ஒரு பல்கலைக்கழக மாணவன் வந்தான். புத்தகங்களைப் பார்வையிடத் தொடங்கினான். டி.எஸ். எலியட்டின் ‘தி லவ் ஸாங் ஆஃப் ஆல்ஃப்ரெட் ப்ருஃபோக்’ கையில் எடுத்தவாறு, ‘இது நல்லா இருக்குமா, சார்?’ என்று க.நா.சுவைக் கேட்டான்.

‘அது நீங்க நினக்கிற மாதிரி காதல் பாட்டு இல்லே, உங்களுக்குப் புரியாது இந்தப் புத்தகம்’ என்றார் க.நா.சு.

அந்தப் பையன் அவரைக் கோபத்துடன் பார்ப்பது போல் எனக்குப் பட்டது.

இரண்டாண்டுகளில் அப்புத்தகக் கடையை அவர் நஷ்டத்தினால் மூடும்படியாக ஆகிவிட்டது என்று நான் பிறகு அறிந்தேன்.

நான் ஆச்சர்யப்படவில்லை.

அந்தச் சந்திப்புக்குப் பிறகுதான் அவர் எழுதியிருந்த நூல்களைப் படிக்கத் தொடங்கினேன். தன்னை அறிவித்துக்கொள்ளாத, ஆரவாரமற்று, படைப்பின் உள்ளடக்கத்தை, வாசகனிடம் அவன் கவனத்தை திசைதிருப்பி விடாமல், நேரடியாகச் சொல்லும் தமிழ்நடை அவரிடமிருந்துதான் தொடங்கியிருக்க வேண்டுமென்று எனக்குத் தோன்றிற்று.

அவரை நான் மறுபடியும் சந்தித்தது 1968ல். தில்லி கரோல்பாக் ராமானுஜம் மெஸ்ஸில். அவர் காப்பி குடித்துக்கொண்டிருந்தார்.

‘என்னை நினைவிருக்கா?’ என்று அவரைக் கேட்டேன்.

அவர் சிறிது நேரம் என்னை உற்றுப் பார்த்தார்.

‘துரைசாமி ஃப்ரெண்ட். பெயர் நினைவில்லை’ என்றார்.

‘பார்த்தசாரதி. இந்திரா பார்த்தசாரதிங்கிற பேரிலே அஞ்சாறு வருஷமா எழுதிண்டிருக்கேன்’.

‘தமிழ்லியா?’.

‘ஆமாம். தீபம், கணையாழி......’

நான் பிரபலப் பத்திரிகைகள் பெயரைச் சொல்லவில்லை.

‘நான் வாசிச்சதில்லே.’

‘நீங்க தமிழ்லே இனிமே எழுதப் போறதில்லேன்னு கேள்விப்பட்டேனே, அப்படியா?’

அவர் பதில் சொல்லவில்லை. புன்னகை செய்தார்.

‘நீங்க எங்க இருக்கீங்க?’ என்று கேட்டார் சிறிது விநாடிகளுக்குப் பிறகு.

‘டிஃபன்ஸ் காலனி’

‘நானும்’ டிஃபன்ஸ் காலனிக்குத்தான் ‘ஷிஃப்ட்’ பண்ணப் போறேன், அடுத்த வாரம்.. ‘ஏ’ ப்ளாக்’.. என்றார் அவர்.

எனக்குச் சந்தோஷமாக இருந்தது. நானும் அந்த 'ப்ளாக்கி'ல்தான் இருந்தேன். அவரை அடிக்கடி சந்திக்க முடியும் என்ற சந்தோஷம்.

அவர் 'டிபன்ஸ் காலனி'க்குக் குடிவந்த பிறகு, அவரைக் 'கணையாழி' ஆசிரியர் கஸ்தூரி ரங்கனுடன் பார்க்கப் போனேன்.

கஸ்தூரி ரங்கனை அறிமுகப்படுத்தினேன்.

'எதுக்காக தமிழ் பத்திரிகை நடத்தணும்னும் உங்களுக்குத் தோணித்து?' என்றார் க.நா.சு, கஸ்தூரி ரங்கனிடம்.

'இவர் புதுக்கவிதை எழுதறார்.. செல்லப்பா 'புதுக் குரல்கள்'லே இவருடைய ரெண்டு கவிதைகள் வந்திருக்கு' என்றேன் நான்.

'அப்பொ முத்திரை குத்தின மாதிரிதான்' என்றார் க.நா.சு சிரித்துக்கொண்டே. .'

'நீங்க ஏன் தமிழ்லே எழுதறதில்லேன்னு வச்சிண்டிருக்கீங்க? அஃப் கோர்ஸ், நீங்க தமிழைப் பத்தி இங்கே இங்கலீஷ்லே எழுதறது அவசியம் வேண்டியதுதான். நன்னாவுமிருக்கு; 'கணையாழி'க்கு எழுதுங்களேன்' என்றார் கஸ்தூரி ரங்கன்.

'தமிழ்லே எழுதினது போறும்னு தோணித்து. யார் படிக்கறா?'

'என்ன சொல்றீங்க? எந்த தமிழ் இலக்கியப் பத்ரிகையாக இருந்தாலும் உங்க பேரைச் சொல்லாமெ இருக்க முடியுமா?' என்றேன் நான்.

'தமிழ்ப் பண்டிதர்கள்ளாம் என்னைத் தமிழ் துரோகின்னு திட்ட என் பேரைச் சொல்றா, இல்லேன்னு சொல்லலே..' என்று சிரித்துக்கொண்டே சொன்னார் க.நா.சு.

'நானும் தமிழ்ப் பண்டிதர்தான். நான் திட்டலே..' என்றேன் நான்.

'நவீன இலக்கியம் எழுதற தமிழ்ப் பண்டிதர் நீங்க. இது திரிசங்கு சொர்க்கமா, நரகமான்னு நீங்களே முடிவு பண்ணிக்கலாம்' என்றார் க.நா.சு.

அப்பொழுது க.நா.சுவின் இலக்கிய விமர்சனங்கள் கடுமையான கண்டனத்துக்கு உள்ளாகின என்பது உண்மைதான்.

அவருடைய ஆழ்ந்த, அகலமான படிப்புக்கேற்ப அவருக்கென்று பிரத்யேகமாக அவருக்குள் உருவாகியிருக்கும் இலக்கிய ரஸனையை அளவுகோலாக் கொண்டுதான் அவர் நூல்களை மதிப்பிட்டாரே தவிர, மரபு பற்றிய, அல்லது 'இயத்தை' அடிப்படையாக க் கொண்ட இலக்கிய விமர்சன கோட்பாடுகள் எவற்றைப் பற்றியும் அவர் கவலைப்பட்டதில்லை.

இது சம்பந்தமாக ஒன்று என் நினைவுக்கு வருகிறது.

1988ல், நான் புதுவைப் பல்கலைக்கழகத்தில் சேர்ந்திருந்த புதிதில், நூல் நிலையத்துக்குப் புத்தகம் வாங்க என்னைப் பணித்திருந்தார் துணை வேந்தர். நாடகப் புத்தகங்கள் மட்டுமன்றி நிறைய இலக்கிய விமர்சன நூல்களும் வாங்கியிருந்தேன். அந்நூல்கள் அனைத்தும் என் அலுவலக அறையில் இருந்தன. பக்கத்து அறையில், அப்பொழுது அங்கு விருந்து புலப்பேராசிரியராக க.நா.சு தங்கியிருந்தார். என் அறையிலிருந்த எல்லா இலக்கிய விமர்சன நூல்களையும் ஐந்தே நாட்களில் படித்து முடித்துவிட்டர்!

'அத்தனையும் படிச்சு முடிச்சுட்டீங்களா?' என்று கேட்டேன்.

'என்னை 'இலக்கிய விமர்சகன்'னு ஒரு சிமிழியிலே போட்டு அடைச்சு, சாஹித்ய அகதெமி பரிசையும் இந்தத் தள்ளாத வயசிலே கொடுத்துட்டா. இலக்கிய விமர்சன கோட்பாடுகள்னா என்னன்னு இப்பொழுதாவது தெரிஞ்சுக்க வேணாமா, அதுக்காகப் படிச்சேன்' என்றார் விஷமப் புன்னகையுடன்.

அடிப்படையில் ரஸிகமணி டி.கே.சியின் ரஸனையும் க.நா.சு வகையைச் சார்ந்ததுதான் என்றாலும், க.நா.சுவின் படிப்பின் பரப்பு வேறு வகையானது. மேற்கத்திய ரஸனையின் பாதிப்பு அதிகம்.

க.நா.சுவுக்கு உள்மனத்தில் எப்பொழுதுமே ஓர் ஆதங்கம் உண்டு. கிட்டத்தட்ட பத்து, பன்னிரெண்டு நாவல்களும், பல சிறுகதைகளும், கவிதைகளும் அவர் எழுதியிருந்தாலும் தமிழ் இலக்கிய உலகின் பரவலான அபிப்பிராயத்தின்படி, அவர் விமர்சகராக மட்டும் இருந்ததுதான். அவருடைய 'பொய்த் தேவு', 'ஒருநாள்', 'அசுர கணம்' போன்ற படைப்புக்கள் பரிசோதனை முயற்சிகளில் வெற்றி அடைந்த, ஆங்கிலத்தில் சொல்வது போன்ற 'ஆர்ட் நாவல்கள்'. அவர் எழுதிய காலகட்டத்தில் இவற்றின் முழு கலைப்பரிமாணத்தை வாசகர்களால் உள்வாங்கிக் கொள்ள முடியவில்லை என்று தோன்றுகிறது. 'அசுர கணம்' சிக்கலான கலை வடிவம் கொண்ட ஒரு 'சைக்கலாஜிக்கல் த்ரில்லர்'.

க.நா.சு தன் படைப்புக்களைப் பற்றி எப்பொழுதுமே பேசியதில்லை. மற்றவர்களுடைய படைப்புக்களைப் பற்றித்தான் அதிகம் பேசியிருக்கிறார். சிறந்த தமிழ் பத்து நாவல்கள் என்று பட்டியலிடும் பழக்கம் அவரிடமிருந்துதான் தொடங்கியது என்று சொல்லலாம். மூன்று நான்கு நாவல்களைத் தவிர, மற்றைய நாவல்களின் பெயர்கள் அவர் பட்டியலில் அடிக்கடி மாறுவதுண்டு. இதைப்பற்றி நான் ஒரு தடவைக் கேட்டபோது அவர் சொன்ன பதில் எனக்கு அதிர்ச்சியைத் தரவில்லை.அவர் எமர்சனை மேற்கோள் காட்டினார்: 'Consistency is the hobgoblin of small minds'

க.நா.சுவின் இலக்கியத் தாக்குதல்கள் கண்ணியமாகவும், நளினமான நகைச்சுவையுடன் கூடியிருக்கும்.

நான் தில்லியிலிருந்த போது, 1978ல், சாஹித்ய அகதெமி செயலர் க.நா.சுவை தொலைபேசியில் அழைத்து என் தொலைபேசி எண்ணைக் கேட்டிருக்கிறார், எனக்கு அந்த ஆண்டு அவ்விருது கிடைத்திருக்கிறது என்ற செய்தியைச் சொல்ல.

அந்தச் செயலர் ஒரு ஜோஸ்யரும் கூட. க.நா.சுவுக்கு செய்தியைச் சொல்லிவிட்டு, 'பார்த்தசாரதியின் zodiac sign உங்களுக்குத் தெரியுமா' என்று கேட்டிருக்கிறார். 'zodiac sign'க்கும் இதற்கும் என்ன சம்பந்தம் என்று க.நா.சு வினவிய போது, 'Gemini'யாக இருக்க வேண்டும், அதனால்தான் இந்த அதிர்ஷ்டம் என்று கூறினாராம் அந்தச் செயலர்.

அப்பொழுது 'ஸ்டேட்ஸ்மென்' பத்திரிகையில் வாரம் ஒரு பத்தி எழுதிக்கொண்டிருந்தார் க.நா.சு. அவர் எழுதிய அவ்வாரத் தலைப்பு 'சாஹித்ய அகதெமி விருது கிடைப்பது எழுத்தாளருடைய zodiac signயைப் பொறுத்த விஷயம் என்கிறார் அகதெமி செயலர்'.

ஆண்டனி ட்ராலப் (Anthony Trollope) என்கிற ஆங்கில எழுத்தாளரைப் போல் க.நா.சு தினம் பத்துப் பக்கங்களுக்குக் குறையாமல் எழுதுவது என்ற பழக்கம் வைத்திருந்தார். அவருடைய சுயசரிதையின் பெரும்பான்மையான பகுதியை அவர் புதுக்கவிதையில் எழுதியிருக்கிறார். 'கணையாழி'யில் சில பகுதிகள் பிரசுரமாகியிருக்கின்றன. பிரசுரமாகாத படைப்புக்கள் அவரிடம் நிறைய இருந்திருக்க வேண்டுமென்று தோன்றுகிறது.

parthasarathyindira@gmail.com ■



# விற்பனையில்!
















வாழும் தலைமுறையும் வரும் தலைமுறைகளும் பயன்படுத்திக் கொள்ளும் வகையில் 1965 ஜூலை முதல் 1970 ஜூலை வரையிலான கணையாழி இதழ்கள் அப்படியே அச்சுப் பிசகாமல் 5 தொகுதிகளாக 2606 பக்கங்களில்.

**ஒவ்வொரு தொகுதியும் ரூ.500**

Kanaiyazhi padaippakam எனும் பெயரில் மணி ஆர்டரோ அல்லது காசோலையோ:
கே 502, விக்டோரியா டவர்ஸ், # 37, இராஜிவ் காந்தி சாலை (OMR), கழிப்பட்டூர், தமிழ்நாடு –603103
எனும் முகவரிக்கு அனுப்பிப் பெற்றுக் கொள்ளலாம். அல்லது வங்கியில் நேரடியாகச் செலுத்திப் பெற்றுக் கொள்ளலாம்.

வங்கியில் நேரடியாகச் செலுத்த –
Name of the Account : Kanaiyazhi padaippakam
Indian Overseas Bank, Valmiki Nagar Branch(1472)
Current Account No. 147202000000946
NEFT- IFSC Code - IOBA0001472

**கணையாழிப் படைப்பகம் வெளியீடு**